உ

# மணிமேகலை

## 1. மணிமேகலை பிறப்பு

சீர் மிகக் கொண்ட செந்தமிழ் நாடு, பண்டைக காலததில, சேர நாடு, சோழ நாடு, பாண்டிய நாடு என மூவகை யாகப் பிரிக்கபபட்டிருந்தது. சேர சோழ பாண்டியா என்னும் முடியுடை வேந்தர் மூவரும் அந்நாட்டினை முறை வழுவாது ஆண்டு வந்தனர் அம்மூன்று நாடுகளில் சோழ நாடு எக்காலததும் நீர வளஞ் சுரக்கும் பொனனி நதி பாயப் பெற்றதாகலின், மிக்க செழிபபுடன் விளங்கும். அங்கு வாழை, மா, கமுகு முதலிய பயன் தரு மரங்கள் பல பல வானுற ஓங்கி வளர்ந்து, நல்ல பலனைத் தரும். அந்நாட்டினைப் புனல் நாடு, பொன்னி நாடு, நீர் நாடு, சென்னி நாடு எனப் புலவர் புகழ்ந்துரைப்பர்.

'நாடெல்லாம் நீர்நாடு தனைஒவ்வா.'
'சோழ வளநாடு சோறுடைத்து.'

என்ற அடிகளும் அந்நாட்டின் மேன்மையைக் குறிக்கும்.

இவ்விதச் சிறப்புக்களையுடைய சோழ நாட்டின் தலை நகரங்களிற் சிறப்புற்ற நகரம், காவிரிப்பூம் பட்டினமாகும். அது காவிரி நதி கடலோடு கலக்குந் துறை முகத்தில உள்ளது. ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகட்குமுன், கரிகால் வளவன் என்னும் சோழ மகாராஜன் காலத்தில், காவிரிப்பூம் பட்டினம் அடைந்திருந்த வனப்பும், பெருமையும், செல்வமும் பட்டினப்பாலை, சிலப்பதிகாரம் முதலிய

பண்டை நூலகளிற் பரக்கக் கூறப்பட்டிருக்கின்றன. அந் நகரம் பூம்புகார் எனறுங் கூறப்படும்.

இததகைய பெருமை நிறைந்த புகார நகரினைத் தலை நகரமாகக கொண்டு கரிகால வளவன் அரசாண்டு வருங் காலததில, பெருங்குடியா என்னும் வணிகர் குலததுதிதத மாசாத்துவான் என்பவன், தன் மகன் கோவலனுககு, அந்நக ரில அமமரபில் தோனறிய மாநாய்கன் மகள கண்ணகியை மணம் புரிவிதது, அவவிருவரும் இல வாழ்ககையை நனகு நடததுதலைக காண வேண்டி, இலலறம நடததுதற்கு வேண்டும் பொருளகளைப் புதிய மாளிகை யொனறில் நிரப்பி, அவாகளையும் அதில இருததினன். கோவலனுங் கண்ணகியும் அம்மாளிகையிலிருந்து, அறவோாக் களிததல, அந்தணரோம்பல முதலிய அறங்களைக குறைவறச செயது இல வாழ்ககையை இனபமாக நடததி வந்தனா.

கோவலன் தன மதியினமையால தன மனைவியாகிய கண்ணகியை விட்டு நீங்கி, நாடகக் கணிகையாகிய சித்திரா பதியின் மகள் மாதவியை விரும்பி, எப்போதும அவளோடு காலங் கழித்தான. மாதவி ஓர் அழகிய பெண் மகவைப் பெற்றாள். கோவலன், தன் முன்னோரில ஒருவா கடலில விழுந்து கரை சேர முடியாது துன்புற்ற காலததில, அவரைக காப்பாற்றிய மணிமேகலைத தெய்வத்தின் பெயரையே அப் பெண்ணுக்கு இட வேண்டும் என்று சொலல, அங்ஙனமே அவளுக்கு மணிமேகலை என்று பெயரிட்டனர். மணிமேகலை வளர் பிறைபோல வளர்ந்து வந்தாள்.

---

## 2. விழாவறை காதை

சோழ வள நாட்டினைத் தூங்கெயிலெறிந்த தொடித்தோட் செம்பியன் ஆண்டு வருங் காலத்தில, வானம் மழை பெய்யாது வறுமை மிக்கு, மக்கள் பசிப்பிணியால் வாட்ட

முறறுாகள. அது கண்ட மன்னவன், தன் நாட்டினை வளம் படுதத நினைந்து, அகத்திய முனிவரை யடைந்து வணங்கி, யாது செயவதென வினவினன் முனிவர் மன்னனை வாழ்ததி, ' ஆண்டுதோறும் தவறுமல இந்திர விழா நடததி வரின, நாடு செழிககும்,' எனக் கூறினா மனனன் அபபடியே அவவிழா வைச செயது, வளம் நிரமபப பெறறு மகிழ்சசியடைந்தான். அது முதல காவிரிபபூம் பட்டினததில இந்திர விழா ஆண்டு தோறுங் கொண்டாடபபட்டு வந்தது

இவவாறு நடந்து வருங் காலததில, ஓா ஆணடு அந் நகரப பெரியோா அவவிழாவை நடததத் தீாமானிததது, முரசறைவோனை அழைதது, ' ஆண்டுதோறும் வழககமாக நடததி வருகின்ற இந்திர விழாவை மறந்தால, நமது நகரத் திற்குப பல தீமைகள விளையுமாகலின், அறிஞர்கள் அதனை நடத்த முடிவு செய்திருககிறாாகள் என்று ஊராாக்கு அறி விப்பாயாக,' என்று உரைததார்கள்.

முரசறைவோன் வசசிரக கோட்டததிலுள்ள முரச வாததியத்தை யானையின் பிடரின்மீது ஏற்றித தானும் ஏறி வீதியை யடைந்து, முதலில்,

> ' பொன்னிவளா நாடும பூமபுகாா நகரும்
> மன்னவன் ஆணையும மாணபொடு திகழக,'

என்று வாழ்ததிப் பின், 'அறிவிற் சிறந்த ஆன்றோாகளே, நமது நகரப் பெருமக்கள் வழக்கம்போல இந்திர விழா நடத்தக் கருதி யிருக்கிறார்கள். அக்காலத்தில் தெய்வ லோகம் வறிதாகும்படி, எல்லாத் தேவாகளும் இந் நகருக்கு எழுந்தருளுவார்கள். ஆகலின், வீதிகளிற பூரண கும்பமும், பொற்பாலிகைகளும், பாவை விளக்கும் பரப்பி வையுங்கள், தெருக்களிலும் மன்றங்களிலும் உள்ள பழமணல் மாற்றிப் புது மணல் பரப்புங்கள்; தூண்களில் முத்து மாலை முதலியவற்றைத் தொங்க விடுங்

கள்; மாளிகைகளின்மேலும் முற்றங்களிலும் துகிற்கொடி கட்டுங்கள்; எல்லாத தேவர் கோட்டங்களிலும் செய்ய வேண்டியவைகளைக் குறைவறச செயயுங்கள். அற நூற் புலவர்களே, மன்றங்களிலும் மேடைகளிலும் இருந்து, அனைவர்க்கும் அற நூற் பொருள்கள் விளங்கச் சொற் பொழிவு நிகழ்த்துங்கள். சமய வாதிகளே, கல்வி மண்டபத திற் கூடி, வாதம் புரிவீராகளாக. தேவர்களும் மக்களும் ஒருங்கு சேர்ந்து நீரத்துறைகளிலும், ஆற்றிடைக் குறையி லும், மணல் மேடுகளிலும் கூடி வாழுங் காலம் வந்திருக் கின்றமையால், யாவரும் பகைவராயினுங் கோபமுங் கலகமுஞ் செய்யாது, பகை நீங்கி உறவு பூண்டு, இத்திரு விழா நாளை நனகு கழிபபீராகளாக,' என்று நகா முழுதும் பறை சாற்றி, இந்திர விழா நடக்கப் போவதை யாவருக்குந் தெரிவிததான்.

## 3. ஊர் அலர் உரைத்த காதை

பின்னர் இந்திர விழா மிக்க சிறப்புடன் தொடங்கியது. அந்நாளில், தனனை விட்டு நீங்கிய கோவலன் தன் மனைவியாகிய கண்ணகியுடன் புகாா நகரத்தினின்றும் புறப்பட்டு, மதுரையை அடைந்து, ஆங்கு ஒரு பொற்கொல்லனுடைய சூழ்ச்சியாலும், வினைத் தொடர் பாலும் பாண்டியன் நெடுஞ்செழியனுற் கொலையுண் டிறந்த துன்பச செய்தியை மாதவி கேள்விப்பட்டாள். அதனால், அவள் பொறுக்க முடியாத கவலை கொண்டு, தன் பொருள் எல்லாவற்றையுந் தானஞ் செய்து, தவவொழுக்கம் பூண் டாள்; தன் மகள் மணிமேகலையையும் நல்ல நெறியிற் செலுத் தக் கருதித் துறவறத்திற் செலுத்தினள். இதனால், இந்திர விழாவிற்கு மாதவியும் மணிமேகலையும் சென்று ஆடல் பாடல்

முதலியவற்றால் நகர மக்களை மகிழ்விக்காமல், மலர் மண்ட பத்தில் தங்கி இருந்தனர்.

மாதவியும் மணிமேகலையும் இந்திர விழாவிற்கு வாரா மையால், ஊரார் கூறும் பழி மொழிகளைக் கேட்ட மாதவி யின் தாயாகிய சித்திராபதி, மிகுந்த கவலை கொண்டு, மாதவியின் உயிர்த் தோழியாகிய வசந்த மாலை என்பவளை அழைத்து, 'நீ இப்பொழுதே மாதவியும் மணிமேகலையு மிருக்குமிடஞ் சென்று, வழக்கம்போல அவர்கள் இந்திர விழாவிற்கு வாராமையால் ஊரார் மிகவுந் துன்பமடைகின் றனர் என்றும், அவர்கள் தங் குல ஒழுக்கத்தை விட்டுத் தவ ஒழுக்கத்தை மேறகொள்வது தகுதியுடைய தன்றென் றும், ஆகலின், உடனே புறப்பட்டு வரவேண்டுமென்றும் தெரிவித்து, எவவாறேனும் அவர்களை அழைதது வரு வாய்,' என்று சொல்லி யனுபபினள

வசந்த மாலை உடனே மலா மண்டபததிற்குச சென்று, தவததால இளைதத மாதவியையும் மணிமேகலையையுங் கண்டு, வாடிய மனததை யுடையவளாய்ச சிததிராபதி கூறி யவற்றை அவர்களுக்குத் தெரிவிததாள் அம்மொழிகளைக் கேட்ட மாதவி, 'வசந்த மாலாய், நீ மணிமேகலையின் தனமையை யறியாது இவவாறு பேசினை! மனைவியுடன் மதுரையை யடைந்து அநியாயமாயக் கொலையுண் டிறந்த கோவலருக்கும் கற்பின் கொழுந்துபோன்ற கண்ணகிக்கும் மகளாகிய மணிமேகலை தவநெறியிற செல்லுதற்கு உரியவளே யன்றி, அவநெறியிற் செல்லுதற்கு உரியள் அல்லள். யானும் என் கொழுநர் உற்ற பெருந்துயர் பொறாது, அறவண அடிகளைச சேர்ந்து முறையிட்டேன். அவர் எனக்கு,

பிறந்தோர் உறுவது பெருகிய துன்பம்;
பிறவார் உறுவது பெருமபே ரின்பம்;

பற்றின் வருவது முன்னது ; பின்னது
அற்றோர் உறுவது அறிக,'

என்று கூறிய பின்னுஞ் சில தருமங்களையும் உபதேசித்து, என்னைத் தவ வழியிற் செல்லும்படி பணித்தார். அது முதல் யானுந் தவ வொழுக்கத்தை மேற்கொண்டேன். ஆகலின், அவ்விழாவிற்கு வருதற்கு உரியேன் அல்லேன். நீ இதனை என் அன்னை சித்திராபதிக்கு உரைத்து, அவள் கோபத்தை ஆற்றுவாயாக,' என்று சொல்லி அனுப்பினாள். தோழியாகிய வசந்த மாலை பெறுதற்கரிய மாணிக்கத்தைக் கடலில் வீழ்த்தினவரைப்போல மனங் கலங்கிச் சென்று, மாதவி கூறியதைச் சித்திராபதிக்கு உரைத்தாள்.

---

## 4. மலர் வனம் புக்க காதை

வசந்த மாலையிடம் மாதவி கூறிய சொற்கள், மணிமேகலையின் செவி வழியாக அவள் உளத்திற் புகுந்து, அவளை வருத்தின. அவள் தன் தந்தை கோவலனும் தாய் கண்ணகியும் மதுரையி லடைந்த துன்பங்களை எண்ணி எண்ணிக் கண்ணீர் சொரிந்தாள். அக்கண்ணீர் அவள் தொடுத்துக்கொண்டிருந்த நறுமலர் மாலையை நனைத்தது. மாதவி அதனைப் பார்த்து, மணிமேகலையின் கண்ணீரைத் தன் கையால் துடைத்து, இனிய சொற்களால் அவள் மனத்தைத் தேற்றி, 'என் கண்ணே, நீ சொரிந்த கண்ணீர் நீ தொடுக்கும் மலர் மாலையை நனைத்து அசுத்தப்படுத்தியதால், அது பெருமானுக்குச் சாத்த உதவாது. மலர்வனஞ் சென்று வேறு மலர் பறித்து வருவாய்,' எனப் பணித்தாள்.

மணிமேகலை அங்ஙனமே மலர் வனம் போகப் புறப் பட்டாள். அப்பொழுது அவளுட னிருந்த சுதமதி என் னும் பார்ப்பனத் தோழி மாதவியை நோக்கி, 'இளமைப்

பருவமும் அழகும் நிறைந்த பெண்களை எவ்விடத்திற்குந் தனியே அனுப்புதல் கூடாது; அனுப்பினால், பல தீமைகள் நிகழும். உதாரணமாக, யான் தனியே சென்றதனால் அடைந்த துன்பங்களைக் கூறுகின்றேன் கேள்:

'நான் பண்பு மிக்க பெரியோர் வாழுஞ் சண்பை நகரத்துக் கௌசிகர் என்னும் ஓர் அந்தணர் மகள். ஒரு நாள் நான் சிறிதும் அச்சமும் ஆலோசனையுமின்றிப் பூஞ்சோலையை யடைந்து, மலர் பறித்துக்கொண் டிருந்தேன். அப்பொழுது இந்திர விழாவைக் காண வந்த மாருதவேகன் என்னும் வித்தியாதரன், என்னை விரும்பி ஆகாய வழியே எடுத்துச் சென்றான். அவன் சில காலம் என்னைத் தன் வசம் வைத்திருந்து, பின் இவ்விடத்தில் தனியே விட்டுச் சென்றான். பெண்கள் தனித்துச் செல்லுவதால் விளையுந் தீமை இதுவாகும். ஆகலின், மணிமேகலையுடன் யானுஞ் செல்வேன்.

'இலவந்திகைச் சோலை அரசாகுரியார் வாழுமிடமாகலின், ஆண்டுச் செல்லுதல் கூடாது, வானவர்களாலன்றி மனிதர்களால் விரும்பப்படாதனவும், வண்டுகள் மொய்க்கப் பெறாதனவுமாகிய மலர்களை உய்யான வனம் உடைமையானும், அது பூதங்களாற் காக்கப்படுகின்றமையானும் அவ்விடத்துஞ் செல்லுதல் ஆகாது. கவேர வனமுஞ் சம்பாதி வனமும் முதுமையுடையனவுந் தீண்டி வருத்துவனவுமாகிய தெய்வங்களாற் காக்கப்படுகின்றமையால், அவ்விடங்களிலுஞ் செல்லக் கூடாது. அன்பும் அருளும் பழுத்த பகவானுடைய ஆணையாற் பல மரங்களும் செழித்து வளர்ந்து பூத்திருக்கின்ற உவவனம் என்பதொன்றுண்டு. அவ்வனம் பல அருந்தவ முனிவர்கட்கு உறைவிடமாக இருத்தலின், அவ்விடத்திற் செல்வார்க்கு யாதொரு துன்பமும் நிகழ்தல் இல்லை. உள்ளே இருப்பவர்களது ஓசையை

வெளிப்படுத்தாமல், அவர்கள் உருவங்களை மாத்திரம் வெளிப்படுத்தக் கூடிய அழகு நிறைந்த பளிங்கு மண்டபம் ஒன்று அவ்வனத்தின் நடுவில் உளது. அம்மண்டபத்தினுள்ளே மாணிக்கத்தின் ஒளி நிரம்பிய பதும பீடம் ஒன்று இருக்கிறது அப்பீடத்தில் இட்ட அரும்புகள் தாமாகவே மலரும், மலர்ந்த மலர்கள் எப்பொழுதும் வாடாம லிருக்கும். அப்பூக்களில் வண்டுகளும் மொய்க்க மாட்டா. அப்பதும பீடம் பலவகைப் பெருமைகளை யுடையது, மயன் என்பவனாற் கட்டப்பட்டது இதுவரையில அதன் மாண்பினை உனக்குச் சொல்ல மறந்தேன்!

'அவ்வனத்திற்குச் சென்றால், மணம் நிறைந்த பல மலர்களைக் கொண்டு வரலாம்,' என்றுரைத்து, மணிமேகலையுடன் தானும் உவவனஞ் செல்லப் புறப்பட்டனள். இருவரும் வீதி வழியே சென்றனர். செல்லும்போது கள்ளுண்டு களிக்கும் களி மகன் ஒருவன், உண்ணா விரதம் பூண்டு இளைத்த மேனியுடையார் ஒருவரைப் பார்த்து, 'ஐயரே, நீர் மதுவினை உண்பீராயின், உமது உடல் இன்பமடைந்து செழுமை பெறும். உமது இளைத்த உடலிற் பட்டு வருந்தும் உயிரும் அவ்வேதனை நீங்கிப் பேரின்பமடையும். ஆகலிற் கள்ளினை உண்பீராக,' என வற்புறுத்திக் கூறுவதைக் கண்டு, அவன் பின் தொடர்ந்து செல்வாரும், சித்த நிலை திரிந்த பித்தனுடைய விகாரச் செயல்களைக் கண்டு வருந்தி நிற்பாரும், ஓவிய நூல் வல்லான் சுவர்களின்மீது எழுதி வைத்திருக்கின்ற அழகான உருவங்களைக் கண் குளிரக் கண்டு வியந்து நிற்பாருமாகிய அனைவரும், விராட நகரத்திற் பேடியுருவங் கொண்டு சென்ற விசயனைச் சூழ்ந்து போன விராட நகர வாசிகளைப் போல, மணிமேகலையைச் சூழ்ந்துகொண்டு, 'ஒப்புயர்வற்ற உத்தம இலக்கணம் நிரம்பிய பூங்கொடிபோன்ற இம்மணிமேகலையைத் தவ

நெறியிற புகுத்திய மாதவி மிகக் கொடியள்! இம்மங்கை யர்க்கரசி மலாவனம் புகின், அவ்வனத்தில வாழும் அன்னப் பறவைகள் இவளது நடையழகைக் கண்டு என்ன துன்ப முறுமோ!' எனப் பல பல பேசிக்கொண்டு நிறக, மணி மேகலையும் சுதமதியும் உவ வனத்தை யடைந்தனா

---

## 5. பளிக்கறை புக்க காதை

மணிமேகலை உவ வனத்தை யடைந்து, அவவனத்தில வான ளாவி வளர்ந்த வன்னி, கொன்றை, சண்பகம், பலாசு, செருந்தி, மந்தாரம், குரவம், புன்னை, பாதிரி முத லிய மரங்களின் வனப்பையும், அழுககாறு முதலிய குற்றங் கள் நீங்கிய பெரியோா திருவுளளம்போலப் புனிதமான நீா நிறைந்த ஓடைகளையும், அவவோடைகளில நீணிறத்தாற் சோலை நிறம பெயர, நீடிய தந் தாணிறததாற பொய்கைத தலஞ் சிவப்பத் தோனறும் அன்னப பறவைகளையும், பின னும் பல வளங்களையுஞ் சுதமதி காட்டக் காணலாயினள்.

இவள நிலைமை இவவாறாக, அரசனது பட்டத்து யானை யாகிய **கால வேகம்** என்னுங் களிறு மத வெறி கொண்டு, நகரத்திற் பல விடங்களிலும் அலைந்து திரிந்து, மனிதர் களைப பெரிதுந் துன்புறுத்தியது.. அதனை யறிந்த அரசன் மகனாகிய **உதய குமரன்,** விரைந்து சென்று, யானையின் மதத்தையடக்கித் தன் சேனைகள் பின் தொடரத் தேரேறி, வீதி வழியாக வரும்பொழுது, தன் நண்பனாகிய **எட்டி குமரனைக்** கண்டு, அவனால மணிமேகலை சுதமதியுடன் உவ வனஞ் சென்றதை யறிந்து, அவளிடத்திற் காதல மிகுந் தவனாய், 'நான் இப்பொழுதே சென்று மணிமேகலையை என் தேரில ஏற்றிக்கொண்டு வருவேன்!' என்று அந்நண்ப னிடங் கூறித் தேரை உவ வனத்திற்குச செலுத்தினன்.

உதய குமரன் ஏறிச் சென்ற தேரோசை மணிமேகலையின் செவியிற் புகுந்தது. அப்பொழுது அவள் அச்சமுற்று நடுங்கித் தன் தோழியாகிய சுதமதியை யழைத்து, 'சுதமதி, இங்கே கேட்கின்ற தேரொலி உன் காதில் விழவில்லையோ? இஃது உதய குமரன் தேரோசை போலத் தோன்றுகின்றதே! அவன் என்மேற் காதல் கொண்டுள்ளான் என்று வசந்த மாலை மாதவியிடங் கூறக் கேட்டிருக்கின்றேன், பெண்களாகிய நாம் அவனிடமிருந்து பிழைத்துச் செல்லுதற்கு யாதேனும் உபாயம் உரைப்பாய்,' எனக் கூறினள். மணிமேகலை அச்சத்துடன் உரைத்த மொழிகளைக் கேட்ட சுதமதி அவளுடைய பயத்தை நீக்கி, அவளுக்குத் தேறுதல் சொல்லி, அவளை அங்கிருந்த பளிக்கு மண்டபத்திற் புகுத்திக் கதவைத் தாழிட்டுத் தனியே நின்றனள். அச்சமயம் உதய குமரனும் அவ்விடத்தை யடைந்து, தனியே நின்ற சுதமதியைப் பார்த்து, 'யாருமில்லாத இவ்விடத்தில் நீ தனியே நிற்கின்றது ஏன்? நீ மணிமேகலையுடன் இவ்விடத்திற்கு வந்தாயென்பதை முன்னமே யறிந்தேன். இப்பொழுது அவள் எங்கிருக்கின்றாள்? அவள் நிலைமை யாது? பௌத்த சங்கத்தார் இருப்பிடத்தை அகன்று அவள் இவ்வனத்திற்கு வரக் காரணம் என்னை?' எனப் பல வினவினான். சுதமதி ஒன்றுந் தோன்றாதவளாய்த் திகைத்துப் பின் ஒருவாறு தேறி, உதய குமரனை நோக்கி, 'இளமைப் பருவத்தே முதுமை வேடம் புனைந்து மாறுபட்டு வந்த இருவர் வழக்கை விசாரித்து, அவர்கள் சொல்லைக் கொண்டே உண்மையை யறிந்து முறைப்படியே தீர்ப்புச் செய்த மன்னர் மன்னராகிய கரிகால் வளவர் வழியிற் பிறந்த இளவரசரே, உமக்கு அறிவு, அமைதி, அரச நீதி முதலியவற்றைப் பெண்ணாகிய யானோ உரைக்குந் தரமுடையேன்? ஆயினும்,

ஒன்று கூறுவேன், கேட்பீராக. நாம் எடுத்த வுடல முன் செய்த வினையால வந்தது, மேல் வரும் வினைகளுக் காரண மாய் உள்ளது; அணிந்த ஆடை, சாந்து மலா, முதலிய வற்றைக் களைந்தபோது புலால மணங் கமழ்வது, மூப்பும் மரணமும் உடையது, கொடிய நோய்கட்கு இருப்பிடமாக உள்ளது; புற்றில் வாழும் பாம்பினைப்போன்ற கோபத திற்கு இருப்பிடமா யுள்ளது. ஆதலின, நீவிா இதனை யாராய்ந்து பாரும்,' என உடம்பின் இழிபுகளை எடுத்துரைத தனள். அந்நன்மொழிகள உதய குமரன் செவியிற புகு முன்னரே பளிக்கறையினுள்ளிருந்த மணிமேகலையின உரு வம் அவன் கண்ணுக்குத தோன்றிற்று

## 6. மணிமேகலைத் தெய்வம் வந்து தோன்றிய காதை

உதய குமரன் மணிமேகலையி னுருவத்தைக் கண்டு, அப்பளிக்கறையினுட் புகுவதற்குரிய வழியைக் காணு மல, கையால் தடவிக்கொண்டே நாற்புறமுஞ் சுற்றினன், சுற்றியும் வாயில் உணரக் கூடாமையால், மீண்டும் சுதமதி யை யடைந்து, 'மணிமேகலை எத்திற முடையள்?' எனக கேட்டான். சுதமதி, 'அரசரே, மணிமேகலை தவ நெறியிற பயிலுந் தன்மையள், தீங்கு செய்தாரைச சபிக்கும் வன்மை யுடையள். ஆகலின், நீர் 'அவளிடங் கொண்ட ஆசை யொழிக,' என்றுரைத்தாள். உதய குமரன், அவள் எத திறத்தளாயினும், எனக்கே உரியவளாகக் கடவள், துற வற நெறியை மேற்கொண்ட சமண மாதர்களினிடை யில் ஒரு வித்தியாதரனால் இடப்பட்டவளென்று யாவரா லுஞ் சொல்லப்படுகிற நீ அவர்களைப பிரிந்து, பௌத்த

நெறியைக் கொண்ட மாதவி மகள் மணிமேகலையுடன் இங்கு வந்ததற்குக் காரணம் யாது?' எனக் கேட்டான.

சுதமதி, 'மன்னவா மைந்தரே, நான் சண்பை நகரததில வாழ்ந்த கௌசிகர் எனனும் அந்தணர் மகள. என் வினைப பயனால் இளமைப் பருவததிலேயே பெறற தாயை யிழந்தேன், பின தந்தையாரின் ஆதரவினால் வளர்ந்து வந்தேன, ஒரு நாள் பிறா துணை யினறிப் பூஞ் சோலை யடைந்து மலா கொயதேன். அபபொழுது மாருத வேகன் எனனும் விததியாதரன என்னைத தூக்கிச சென்று வைததிருந்து சிறிது காலங் கழிதது, இவவிடததில் தனியாக விட்டுப போயினான். அதுமுதல நான் இந்நகரத தில் இருந்து வருகினறேன. என் தந்தையாா என்னைப பல விடங்களிலுந் தேடிக் குமரியாடச செல்லும் அந்தணர்க ளோடு கூடிப் போகும்போது, காவிரித துறை முகததிற் கடலாட இவவிடம் வந்து, என்னைக் கண்டு, மிகத் துன் புற்று, 'நீ எப்படி இங்கு வந்தாய்?' எனக் கேட்க, நான் என் வரலாறுகளை உரைத்தேன். பின்பு அவா என்னைப் பிரிய மனமில்லாதவராய், இந்நகரத்திலேயே பிசசையேற் றுண்டு, என்னுடன் வாழ்ந்து வந்தார். ஒரு நாள் அவர் பிசசையேற்கப் போனபோது, இளங்கன்றையுடைய பசு வொன்று அவரை முட்டி அவர் குடரைச சரித்தது. அவர் சரிந்த குடரைக் கையில் தாங்கிக்கொண்டு, நான் முன் இருந்த இடமென நினைததுச சமணப்பள்ளியை யடைந்து, அங்குள்ள சமண முனிவர்களை வணங்கி, 'நான் உங்கள் அடைக்கலம்! என்னைப் பாதுகாக்க வேண்டும்!' என்று முறையிட்டார். சமண முனிவாகள் அம்மொழியைக் கேட் டுச சற்றுங் கருணையிலலாமல், அவரைச சினந்து வெளியில் தள்ளிவிட்டார்கள். பின் யானும் என் தந்தையாரும் மிகுந்த விசனத்தோடு வீதியையடைந்து, 'திக்கற்ற எங்

களைக் காப்பார் இலரோ!' என்று முறையிட்டோம். அதைக் கேட்ட சங்க தருமா என்னும் பௌத்த முனிவா, முக மலர்ச்சியுடன் எங்களை ஏற்றுக்கொண்டு, இன்மொழி புகன்று, தம் இடத்திற்கு அழைத்துச் சென்று, வேண்டிய உதவிகள் செய்து, என் தந்தையாரின் மரண வேதனையை யும் நீக்கியருளினர் அம்முனிவா எனக்கு உபதேசித்தபடி அன்று முதல யான புத்த தேவனையே வணங்கிப் பௌத்த சமயத்தை மேற்கொண்டு, மாதவி யிடத்தில் வாழ்வே னாயினேன் ; அதனால், இன்று மணிமேகலையுடன் இவ்விடம் வந்தேன்,' என்று சொன்னாள

அவள் வரலாற்றைக் கேட்ட உதய குமரன், 'நான் உனது வரலாற்றை யறிந்தேன் , இனி மணிமேகலையைச் சித்திராபதியால அடைய முயலவேன்,' என்றுரைத்து, மலர் வனத்தை விட்டுப் போயினன். உதய குமரன் அகன்ற பின் உள்ளே யிருந்த மணிமேகலை, கதவைத் திறந்து வெளியில் வந்து, சுதமதியை நோக்கி,

> ''கற்புத் தானிலள் நற்றவ வுணர்விலள
> வருணக் காப்பிலள் பொருள்விலை யாட்டியென்
> றிகழ்ந்தன னாகி நயந்தோ னென்னாது
> புதுவோன் பின்றைப் போனதென் னெஞ்சம!'

இஃதென்ன விந்தை!' என்று சொல்லிக்கொண்டே அவ் விடத்தில நின்றாள்.

அப்பொழுது இந்திர விழாவைக் கண்டு களிக்குமாறு காவிரிப்பூம் பட்டினத்தை யடைந்த மணிமேகலைத் தெய்வம், முன்னம் சுதமதியும மணிமேகலையும் பழகியிருந்த ஒரு மாய வித்தைக்காரியின வடிவங் கொண்டு, பளிக்கறையிற் புகுந்து, அதனிடத்தில் உள்ள மாணிக்கப் பீடத்தை வலம் வந்து, மேலே எழுந்து நின்று, புத்த தேவரை மனத்தில் நினைத்து, 'அறிவே உருவாகிய அண்ணலே, பரிசுத்த

மூர்த்தியே, உன்னை உலக நோன்பினால் உயர்ந்தவன் என்பேனோ? குற்றம் பலவுங் கடந்தவன் என்பேனோ? கோபத்தை முற்றுங் கடிந்த குணப் பெருங்குன்றே என்பேனோ? காமனை வென்ற வாமனே என்பேனோ? உன் பெருமையை உரைக்க நா ஆயிர முடையேனும் அல்லேன! எவ்வாறு துதிப்பேன்!' என்று துதித்துக்கொண்டிருக்கையில், சூரியன் மறைந்தான்

## 7. சக்கரவாளக் கோட்டம் உரைத்த காதை

சந்திரன் உதய மாயினன் அப்பொழுது மணிமேகலைத் தெய்வம் மீண்டும் புத்த பீடத்தைப் பணிந்து ஏத்தி, வெளியில் நின்றுகொண்டிருந்த சுதமதியையும் மணிமேகலையையும் அணுகி, 'நீங்கள் சோர்ந்த முகத்துடன் இங்கே நிற்பதற்குக் காரணம் யாது? உங்கட்கு நேர்ந்த துன்பம் யாது?' என வினவிற்று. சுதமதி மணிமேகலைத் தெய்வத்தை நோக்கி, உதய குமரன் தேரேறிக்கொண்டு உவவனமடைந்து மணிமேகலையை விரும்பித் தன்னிடங் கூறிய சொற்களையும், அவன் மீண்டு செல்லுங் காலத்தில், 'சித்திராபதியால் இவளை யடைய முயல்வேன்,' என்றுரைத்துப் போனதையும் விளங்கக் கூறினள். அம்மொழிகளைக் கேட்ட மணிமேகலைத் தெய்வம், சுதமதியைப் பார்த்து, 'உதய குமரன் மணிமேகலையிடத்துக் கொண்ட காதல் இன்னுங் குறையவில்லை. இது முனிவர்கள் வாழுமிடம் என்று பயந்து அவன் தவறு ஒன்றுஞ் செய்யாமல் வெளியே சென்றனன். ஆயினும், உங்கள் வரவை நோக்கி வீதியிற் காத்துக்கொண்டிருப்பான். ஆகலின், நீங்கள் வெளியே செல்லுதல் கூடாது. இம்மலர் வனத்தைச் சூழ்ந்து நிற்கும் மதிலின் மேற்குப் புறத்தில் ஒரு சிறு வாயில் உளது.

அவ்வழியே சென்று முனிவர்கட்கும் தெய்வங்கட்கும் உறைவிடமாகிய சக்கரவாளக் கோட்டத்தைச் சேர்ந்து இராப பொழுதைக் கழியுங்கள்,' என்றுரைத்தது. பின்னர், சுதமதி அத்தெய்வத்தை நோக்கி, 'யாவரும் சுடுகாட்டுக் கோட்டம் என்றே அதனை உரைக்கின்றனர், அப்படியிருக்க, நீயும் மாருதவேகனும் சக்கரவாளக் கோட்டம் என்றுரைப்பதற்குக் காரணம் யாது?' என்று கேட்டாள்.

மணிமேகலைத் தெய்வம் சக்கரவாளக் கோட்டத்தின் வரலாறு சொல்லத் தொடங்கிற்று

'காவிரிப்பூம் பட்டினம் தோன்றிய காலத்தே அதனுடன் தோன்றிய அச்சுடுகாட்டுக் கோட்டம், பேய்கள் நிறைந்து வாழும் வாகை மரங்கள் நிறைந்த மன்றங்களையும், நிணத்துடன் கூடிய இறைச்சியைத் தின்று வாழும் பறவைகள் தங்கிய விளா மரங்கள் அடர்ந்த மன்றங்களையும் காபாலிக சமயத்தவர் உறையும் வன்னி மரங்கள் நெருங்கிய மன்றங்களையும், பிணத்தைத் தின்போர் களித்து வாழும் வெளியிடங்களையும், காளியின் கோயிலையும், அருந்தவ முனிவரும் அரசரும் கற்புநிலை வழுவாமற் கணவர்களோடிறந்த பத்தினிப் பெண்டிரும் ஆகிய இவர்கள் புதைக்கப்பட்டதற்கு அடையாளமாக அவரவர்கள் நிலைக்குத் தக்கபடி கட்டப்பட்ட பற்பல கோட்டங்களையும், மயானத்தில வாழுந் தெய்வங்களுக்குப் பலியிடுந் தூண்களையும், காவலாளர் தங்கியிருக்குங் குடிசைகளையும், மேடைகளையும், பந்தர்களையும், தோரணங்களையும் உடையது. அதில தான்றி, உழிஞ்சில் முதலிய மரங்கள் செறிந்திருக்கும்; நெருப்பு வைத்த மட்பாண்டங்களும், அறுத்தெறிந்த மாலைகளும், உடைந்த குடங்களும், நெல்லும், பொரிகளும், பலியிட்ட அரிசிகளும் எங்கும் பரவிக் கிடக்கும்; அன்றியும், பிணங்களைச் சுடுவார் ஓசையும், புதைப்பவர்

ஓசையும், சாப்பறைகளின் முழக்கமும், இறந்த துறவி களைத் தொழுவார் ஓசையும், இறந்தவர்களை நினைத்து அழுவார் குரலொலியும், ஆந்தை கோட்டான் முதலிய வற்றின் அரவமும், எந்நேரமும் மிகுந்திருக்கும். அம் மயானக் கோட்டம் நாற்புறங்களிலும் வாயில்களையுடைய மதிலாற் சூழப்பட்டிருக்கிறது. கொடுந்தொழிலாளனாகிய இயமன், தவநெறிப் பெரியார் என்றும், மிகப் பெரிய பொரு ளாளர் என்றும், இளங்குழவியையுடைய பெண்டிர்களென் றும், இளைஞர் என்றும், முதியவர் என்றும் பாராமல் கண் ணோட்ட மின்றிக் கொன்று குவிக்கவும், அம்மயானம் அவர் களுடைய உடல்களை ஓயாமல் தின்றுகொண்டே யிருக்கவும் கண்டும்,

> 'மிக்க நல்லறம் விரும்பாது வாழும்
> மக்களிற் சிறந்த மடவா ருண்டோ?'

இது நிற்க.

'ஒரு நாள் **சார்ங்கலன்** என்னும் பார்ப்பனச் சிறுவன் ஒருவன் அச்சுடுகாட்டை ஒரு நகரமாக நினைத்துத் தனியே சென்று, அங்கே ஆடிக்கொண்டிருந்த ஒரு பேயைக் கண்டு, நடுநடுங்கி, அச்சத்தோடு ஓடித் தன் வீட்டை யடைந்து, தன் தாயாகிய **கோதமையை** யணுகி, 'சுடுகாட்டி லுள்ள ஒரு பேயிடம் என் உயிரை ஒப்புக்கொடுத்துவிட் டேன்!' என்று சொல்லிக் கீழே விழுந்து இறந்தான். உட னே கோதமை ஆறாத் துயரடைந்து, 'முதுமையால் உடல் தளர்ந்து வாடிய யானும் என் கணவரும் கண்ணிழந்து வருந்துகிறோம் என்பதையும், எங்களுக்கு இம்மக னொரு வனைத் தவிர வேறு புகல் இல்லை என்பதையும் சற்றும் எண்ணாமல், என் மகன் உயிரை உண்டது அணங்கோ? பேயோ? இன்னதென்றறிகிலேன்!' என்று புலம்பிக் கொண்டே, தன் அருமைப் புதல்வனுடைய உடம்பை

எடுத்து மாரபோட்டணைததுச சுடுகாட்டுக் கோட்டத்தின் வாயிலை யடைந்து, ஆண்டு வாழுஞ சம்பாபதி எனுந் தெய் வத்தை அழைததது, 'சம்பாபதி, நீாத துறைகளிலும், மன்றங் களிலும், முது மரங்களின அடியிலும, கோட்டங்களிலும், பிறவிடங்களிலு மிருந்து இநநகரததாாககு ஒரு துனபமும் நேராத வண்ணம் காககினற நீ இனறு என மகனைக கைவிட் டது எதனால? உனனிடம் நடுவு நிலைமை யிலலையோ? இனி யான என்ன செயவேன!' எனறு முறையிட்டாள

'அதைக கேட்ட சமபாபதித தெய்வம் அவள முன் தோன்றி, 'நீ பேயகள் போககு வரவு செயயும இமமயான வாயிலை யடைந்து, இவவிரவில எனனை அழைததததறகுக காரணம யாது? கூறுவாய,' எனக் கேட்டது. கோதமை, அததெயவததை வணங்கி, 'யானும் என் கணவரும் முது மைப பருவமுடையவாகளாய்க கண்ணிலலாது வருந்து கிறோம் எனபதும், எங்கட்கு உதவி செய்வாா ஒருவரும் இலர் எனபதும் நீ அறியாதவை யலலவே! அப்படி யிருந் தும், எங்கள் ஒரே மகன இறந்து போகாமல நீ காவாதது என? எங்களிடம் உனக்குக கருணை யிலலையோ?' என மனங்கசிந்து கூறினள் சம்பாபதித தெயவம் கோதமையைப பாாததது, 'உன மகனுடைய உயிரைக கவாந்தது அணங்கு மனறு, பேயு மனறு. அவனுடைய அறியாமை காரணமாக அவனுடைய தீவினையே அவனுயிரைக் கொண்டது,' எனறு உரைததது.

'இம்மொழிகளைக் கேட்ட கோதமை மீண்டும் சம்பாபதி யை நோக்கி, 'என் உயிரை இவனுயிருக்குப பதிலாகக கவர்ந்துகொண்டு, இவனுயிரைக் கொடுபபாயாயின, கண் ணிழந்த என கணவருக்கு இவன் பணி புரிவான. ஆகலின், அவ்வாறே நீ செய்தருள்க,' என வேண்டி நின்றாள.

'சம்பாபதி, 'உயிரானது ஓர் உடம்பினின்றும் பிரிந்தால் தன் வினைக்குத் தக்கபடி வேறோர் உடம்பிற்சென்று பிறக்கும். ஆதலால், நீ சொன்னபடி செய்ய என்னாலும் ஆகாது; மற்றைத் தேவர்களாலும் ஆகாது. முழு முதற் கடவுள் ஒருவரே அது செய்யும் ஆற்றல் உடையவர். வேண்டுமாயின், அவரொழிந்த மற்றெல்லாத் தேவர்களையும் இங்கே அழைக்கின்றேன், பார்,' என்று சொல்லி, எல்லாத் தேவர்களையும் அங்கு அழைத்தது. எல்லாத் தேவர்களும் வந்து, 'இச்செயல் எங்களால் ஆகாது.' என்று சொல்லிப் போய்விட்டார்கள். பின்பு கோதமை தன் மகனைச் சுடுகாட்டில் விட்டுத் தானும் உயிர் துறந்தாள்.

'பிறகு சம்பாபதியின் வன்மையை யாவருக்குந் தெரிவிக்கவும், எல்லாத் தேவர்களும் ஒருங்கே கூடியதற்கு அடையாளமாகவும் மயன் என்னுந் தெய்வத் தச்சனால் கட்டப்பட்டது அச்சக்கரவாளக் கோட்டம். அது சுடுகாட்டின் மதிலைச் சார்ந்திருப்பதால் அதனைச் சுடுகாட்டுக் கோட்டம் என்றும் உரைப்பர். அதன் வரலாறு இதுவாகும்,' என்று மணிமேகலைத் தெய்வம் உரைத்தது.

அது கேட்ட மணிமேகலை, 'இதுவோ மனிதர் வாழ்க்கை!' எனக் கூறி நின்றாள். அப்பொழுது சுதமதி அயர்ந்து தூங்கிவிட்டாள். மணிமேகலைத் தெய்வம் மணிமேகலையை மயக்கி, ஆகாய வழியாக அவளைத் தூக்கிச் சென்று, தென்றிசையில் முப்பது யோசனை தூரத்துக்கப்பால் நாற்புறமுங் கடலாற் சூழப்பட்ட மணிபல்லவம் என்னுந் தீவையடைந்து, அவளை அவ்விடத்தே விட்டுச் சென்றது.

# 8. துயிலெழுப்பிய காதை

மணிமேகலையை மணிபல்லவத்தில் விட்டு நீங்கிய மணிமேகலைத் தெய்வம் காவிரிப்பூம் பட்டினத்தை யடைந்து, 'பொழுது விடிந்தவுடன் எவ்வாறேனும் மணிமேகலையை என் வச மாக்கிக்கொள்வேன்' என்று எண்ணிக் கலங்கிய உள்ள முடையனாய்க் கண்ணுறங்காது அமளியிற் படுத்துக் கொண்டிருந்த உதய குமரன் முன்னே போய், 'மன்னவன் மகனே

> 'கோனிலை திரிந்திடின் கோணிலை திரியும்;
> கோணிலை திரிந்திடின் மாரிவறங் கூரும்;
> மாரிவறங் கூரின் மன்னுயிர் இல்லை;
> மன்னுயிர் எல்லாம் மண்ணாள் வேந்தன்
> தன்னுயிர் என்னுந் தகுதியின் றாகும்.'

என்பது மெய்ந்நெறி யுணர்ந்த மேலோர் துணிபு ஆகலின், நீ தவவொழுக்கம் பூண்ட மணிமேகலையிடங் கொண்ட ஆசையை நீக்குக,' என்று அவனிடம் உரைத்து, அவ்விடத்தை நீங்கி உவவனமடைந்து, அவ்விடத்தில் தூங்கிக் கொண்டிருந்த சுதமதியை எழுப்பி, 'யான் மணிமேகலைத் தெய்வம், இந்நகரில் நடக்கும் இந்திர விழாவைக் காண வந்தேன், நீ பயப்படாதே. பௌத்த மார்க்கத்திற் சென்று பல நன்மையைப் பெறுங் காலம் மணிமேகலைக்கு வந்திருக்கின்றமையால், யான் அவளை மயக்கி ஆகாய வழியாகத் தூக்கிச் சென்று, மணிபல்லவத்தில் வைத்து மீண்டேன். அவள் அங்குள்ள புத்த பீடத்தைத் தரிசித்துத் தன் பழம் பிறப்பின் வரலாறுகளை யெல்லாம் அறிந்துகொண்டு, இன்றைக்கு ஏழாம் நாளில் இங்கே வருவாள் அப்பொழுது அவள் வேறு வடிவமுங் கொள்வாள்; ஆயினும், உனக்குத் தன்னை ஒளிக்க மாட்டாள். அவள் வந்த பின் இந்நகரிற் பல புதுமைகள் நிகழும். இவையனைத்தும் நீ மாதவிக்கு உரைப்

பாயாக. அவள் முன்னரே என்னை அறிவாள். மணிமேகலை பிறந்த பத்தாம் நாளிற் கோவலன் என்னைப்பற்றி மாதவி யிடங் கூறி, என் பெயரையே தன் பெண்ணுக்கு வைக்கும் படி செய்தான். அன்றிரவு நான் மாதவியின் கனவிற் தோன்றி, 'காமன் ஒரு செயலு மின்றிக் கலங்குமாறு ஆசையை அறவே கெடுக்குந் தவ மாதை நீ பெற்றாய்,' என்று சொல்லி மறைந்தேன் அதனையும் அவளுக்கு நினைப்பூட்டு வாயாக,' என்றுரைத்து, ஆகாய வழியே சென்றது.

பின்பு சுதமதி வருந்தி எழுந்து, அம்மலர் வனத்தின் நாற்புறமுஞ் சூழ்ந்த மதிலின் மேற்றிசையிலுள்ள சிறு வாயில் வழியாகச் சக்கரவாளக் கோட்டத்தை யடைந்து, ஆங்குள்ள உலக அறவியின் ஒரு பக்கத்திற் கவலையோடு தங்கியிருந்தாள். அப்பொழுது பழவினையை யாவருக்குங் காட்டவும், மேல் வருவனவற்றை உணர்த்தவும் மயனென்னுந் தெய்வத் தச்சனால் ஒரு தூணில் இயற்றப்பட்டிருந்த பாவையை அதிட்டித்து நிற்குந் தெய்வமானது, சுதமதியை நோக்கி, 'இரவி வன்மன் பெருமகளே, துரகத்தானைத் துச்சயன் தேவி, நீயும் மாதவியும் மணிமேகலையும் முற்பிறப்பில் இரவி வன்மனுக்கு மக்களாகப் பிறந்தீர்கள். அப்பிறப்பில் இரவி வன்மன் உனக்கு வீரை யென்றும், மாதவிக்குத் தாரை யென்றும், மணிமேகலைக்கு இலக்குமி யென்றும் பெய ரிட்டு, உங்களை அருமையுடன் வளர்த்து வந்தான்.

'பின்பு மணப்பருவ மடைந்த பொழுது உன்னையும் உன் தமக்கையையும் துச்சயன் என்னும் அரசன் மணஞ் செய்துகொண்டான். சில நாள் கழித்து, உன் தமக்கை யாகிய தாரை, மதுவுண்ட மயக்கத்தால், யானை எதிர்ப்பட்டு இறந்தாள். அதத்துயர் பொறாது நீயும் இறந்தனை. பின்னர் நீ கௌசிகன் மகளாகத் தோன்றி, மாருத வேகனாற் கவரப் பட்டு, இந்நகரடைந்து, மாதவியுடன் கூடினாய். உன் தங்கை

யாகிய இலக்குமி (மணிமேகலை) இனறைககு ஏழாம் நாளில தன் பழம்பிறபபையும் உன பிறப்பையும உணர்ந்து, இந் நகரததை யடைவாள. அவளபொருட்டு நீ அஞ்சவேண்டா,' எனறுரைததது. அது கேடட சுதமதி மனங் கலங்கி, அவ விரவை அரிதாகக கழிததாள

பினபு சுதமதி மாதவியை யடைந்து, இரவில் நடந்த எல்லாவறறையும வழுவாதுரைததாள. அவறறை மாதவி கேட்டு, மணியிழந்த நாகமபோல வருந்தி நிறகச சுதமதியும உயிர நீங்கிய உடலபோல உணாவற்றிருந்தாள



## 9. மணிபல்லவத்துத் துயருற்ற காதை

மணிமேகலைத தெயவததின மாயச செயலால மணிபல்லவத்தின கடலருகே நித்திரை செயதுகொண்டிருந்த மணிமேகலை வைகறைப் பொழுதில துயில நீங்கி எழுந்து, அருகே யிருந்த சுதமதியைக் காணாது கூவினள். பினபு, 'இஃது உவ வனததின ஒரு பகுதியோ!' எனறு ஐயமுறறு, அததீவிற பலவிடங்களிலுஞ் சென்று பாாகக, அஃது ஒரு புது இடமாகத தோன்றியது. அதறகுள கருங்கடல் முகட்டிற் செஞ்ஞாயிறு தோனறக கண்டாள. அவள யாருந் துணையின்றி நிறகுந் தன் நிலைமையை நினைத்துப் பெரிதும் வருந்தி, 'உவவனத்திற் சுதமதியுடனிருந்த நாம் இவ்விடத திற்கு வந்தது நேறறு நம்மிடம் வந்த மாய விததைக்காரியின் செயலோ!' என்று சந்தேகப்பட்டு, அததீவு முழுதுஞ் சுற்றினள்; சுற்றும்பொழுது கற்பின் வலியால் மதுரையை எரிதத கண்ணகி தேவியையும், அநியாயமாக அரசனாற கொல்லப் பட்ட தன் தந்தையாகிய கோவலனையும் நினைத்து,

'கோற்றொடி மாதரொடு வேற்றுநா டடைந்து
வைவா ளுழந்த மணிப்பூ ணகலத்து
ஐயா வோ!'

என்று அரற்றினள். இவ்வாறு துன்பத்தோடு மணி பல்லவத்தில் நாற்புறமும் திரிந்துகொண்டிருந்த மணிமேகலையின் கண்ணுக்கு ஒரு புத்த பீடந் தோன்றியது. அப்பீடம் தேவேந்திரனால் அமைக்கப்பட்டது. அப்பீடத்தைச் சூழ்ந்த மரங்கள் புது மலர்களையன்றிப் பழ மலர்களை அதன் மேற் சொரியா. பறவைகளும் அதனருகே சிறகொலி செய்யாமல் அமைதியாகச் செல்லும். அப்பீடம் தன்னைத் தரிசித்தவர்கட்குப் பழம்பிறப்பினியல்பை உணர்த்தும். இப்படிப்பட்ட சிறப்புகள் அமைந்த புத்த பீடத்தை மணிமேகலை கண்டு களிப்புற்றாள்.

## 10. பீடிகை கண்டு பிறப்புணர்ந்த காதை

உலகெலாம் போற்றும் பெருமை வாய்ந்ததும், ஒப்புயர்வற்றதுமாகிய புத்த பீடத்தைக் கண்டவுடன், மணிமேகலையின் கண்கள் ஆனந்தக் கண்ணீர் சொரிந்தன; கைகள் சென்னியிற் குவிந்தன; நாத் தழுதழுத்தது, உடல் புளகமுற்றது, என்புகள் நெகிழ்ந்துருகின. இவ்விதமான அன்பின் மிகுதியால் மணிமேகலை அப்பீடத்தை மும்முறை வலம் வந்து, அடியற்ற மரம்போலப் பூமியில் வீழ்ந்து பணிந்து எழுந்தாள், எழுந்து நின்றவுடன் தன் பழம்பிறப்பின் நிகழ்ச்சிகள் எல்லாவற்றையும் நன்கு அறிந்துகொண்டாள். அறிந்து, 'காந்தார நாட்டு மன்னனாகிய அத்திபதியின் மைத்துனராகிய பிரமதரும முனிவரே, நீர் காயங்கரையென்னும் நதிக்கரையிற் கூறியன யாவும் உண்மையென்று உணர்ந்தேன். நீர் அவ்வரசனை நோக்கி, 'இன்றைக்கு ஏழாம்

நாளில் பூகம்பம் உண்டாகும், அப்பொழுது உன் நகரமும் அழியும், ஆதலின், நீ விரைவாக வேறிடம் புகுவாய்' எனக் கட்டளையிட, அரசனும் அவ்வாறே தன் குடிகளோடு, இடவயம் என்னும் தன் நகரத்தை நீங்கி, அவந்தி நகர்க்குச் செல்லும்போது, இடை வழியிலுள்ள காயங்கரை நதிக்கரையில் பரந்து அகன்றிருக்கிற சோலையில் தங்கினான். அப்பொழுது நீர் உரைத்தபடியே பூகம்பம் உண்டாகி, இடவய நகரமும் அழிந்தது. அதை யறிந்த மன்னவன் தன் குடிமக்களுடன் உம்மை வணங்கிப் பல விதமாகப் புகழ்ந்து துதித்தான். அக்காலத்தில் நீர் அவர்களுக்குப் பல உபதேசங்களைச் செய்தீர். அந்தச் சமயத்தில் அசோதர நாட்டு அரசனாகிய இரவிவன்மன் மகளாகிய இலக்குமி யென்னும் பெயரையுடைய யான், அத்திபதி யரசர் புதல்வராகிய இராகுலருக்கு மனைவியாக இருந்தேனாதலின், என் கணவரோடு வந்து உம்முடைய திருவடியில் வணங்கி நிற்க, நீர் என்னை நோக்கி, 'இவ்விராகுலன், இன்றைக்குப் பதினாறாம் நாளில் திட்டிவிடம் என்னும் பாம்பினால் இறப்பான்; நீயும் இவனுடன் தீப்புகுந்து மாள்வாய், பின்பு காவிரிப்பூம் பட்டினத்திற் சென்று பிறப்பாய். அப்பொழுது உனக்கு ஒரு துன்பமுண்டாகும். அக்காலத்தில் மணிமேகலைத் தெய்வம் உன்னை எடுத்துக்கொண்டு போய் மணிபல்லவத்திற் சேர்க்கும், அங்குள்ள புத்த பீடத்தைக் காண்பாய், கண்டவுடன் உன் பழம்பிறப்புணர்ச்சியை அடைவாய், அதனோடு இன்று நான் உரைத்த மொழிகளையும் அறிவாய்,' என்று சொன்னீர். மறுபடியும் நான் உம்மை வணங்கி, 'என் கணவருடைய பிறப்பையும் உணர்த்தி யருள்க,' எனக் கேட்டேன். நீர், 'உன்னை மணிபல்லவம் என்னும் தீவிற் கொண்டுபோய்ச் சேர்க்கும் தெய்வம் மீண்டுந் தோன்றி அதனை உனக்கு உரைக்கும்,' எனப் புகன்றீர். அப்படியே என் பழம்பிறப்பை அறிந்

தேன். என் கணவருடைய பிறப்பை அறிவிக்கும் தெய்வம் இன்னும் வரவில்லையே!' என்று ஏங்கி அழுதுகொண்டே நின்றாள்.

## 11. மந்திரங் கொடுத்த காதை

மணிமேகலையின் நிலைமை இவ்வாறாக, அவள் எதிர்பார்த்துக்கொண்டு நின்ற மணிமேகலைத் தெய்வம் அதையறிந்து, அவள் காணும்படி பூங்கொடி ஆகாயத்தினின்றும் இறங்கியது போல அவ்விடத்தை யடைந்து, புத்த தேவனுடைய பீடத்தை வலம் வந்து வணங்கி, 'உயிர்களெல்லாம் உணர்வு குறைந்து, மெய்ப்பொருட் கேள்வியில்லாமல் அஞ்ஞானம் மிகுந்து மயங்கும் காலத்தில், உலக இருளை நீக்கும் பரிதிச் செல்வன் தோன்றியதுபோல நீ தோன்றினாய், உன் அடியிணைகளை மனம் மொழி மெய்களால் வணங்குகின்றேன்,' என்று துதித்து நின்றது.

அப்பொழுது மணிமேகலை அத்தெய்வத்தைப் பணிந்து, 'அன்னாய், உனது அருளால் இம்மணிபல்லவத்தை யறிந்து புத்த பீடத்தைக் கண்டு என் பழம்பிறப்பை யறிந்தேன். அப்பிறப்பில் என் கணவராயிருந்த இராகுலர் இப்பொழுது எங்கே யிருக்கிறார்?' எனக் கேட்டாள். மணிமேகலைத் தெய்வம், 'இலக்குமி, கேள்: முற்பிறப்பில் நீயும் இராகுலனும் ஒரு பூஞ்சோலையை யடைந்தீர்கள்; அப்போது நீ உன் கணவனோடு ஊடல் கொண்டாய். அதைத் தணிக்க அவன் உன் அடிகளை வணங்கினான். வணங்குங் காலத்து இரத்தினத் தீவகத்திலிருந்து ஆகாய வழியே சென்ற சாதுசக்கர முனிவர், உச்சிப்பொழுதானமையின் அவ்விடத்தில் இறங்கினார். உன் கணவன் கோபக் குறியுடன், 'இங்கே

வந்தவன் யார்?' எனக் கேட்டான். கேட்டபோது நீ மிக
வும் பயந்து, இராகுலன் வாயை மூடி, 'ஆகாய வழியாக
இறங்கி வந்த இப்பெரியோருடைய திருவடியை வணங்கா
மலும், இவர்க்கு உதவி செய்யாமலும் இருப்பது பெரும்
பாவ மன்றோ?' என்று சொல்லி, அவனையும் உடனழைத்து
வந்து முனிவருடைய அடிகளை வணங்கினாய். வணங்கியபின்
முனிவரைப் பார்த்து, 'ஐயரே, நாங்கள் உமக்கு அடிமையல்லே
மாயினும், உம்முடைய திருவுளத்தின்படியே நடக்குங்
கடமை யுடையேம், அமுதும் நீரும் அளிக்கின்றோம்.
கருணை கூர்ந்து அமுது செய்ய எழுந்தருளுக,' என வேண்டி
னாய். அவரும் அதற்கிணங்கி, அமுது செய்து, ஆகாயவழியே
சென்றார். அவரை உபசரித்து உண்பித்த அப்புண்ணிய
விசேடத்தால், நீ உன் பிறவியை ஒழிப்பாய். அவ்விராகுலனே
உவ் வனத்தில் உன்னை விரும்பியடைந்த உதயகுமரன், அத்
தொடர்பு பற்றியே அவனும் உன்னைக் காதலித்தான், நீயும்
அவனை விரும்பினாய். அந்த ஆசையை அறவே யொழித்து
உன்னை நல்வழிப்படுத்தக் கருதியே நான் அவ்விடம் மாயா
வித்தைக்காரிபோல வந்து, உன்னை மயக்கி இம்மணிபல்ல
வத்திற் கொண்டு வந்து சேர்த்தேன், அதனால், நீ உன்
பழம்பிறப்புணர்ச்சியைப் பெற்றாய். இன்னுங் கேள். அப்
பிறப்பில் உன் தமக்கைமார்களா யிருந்த தாரையும், வீரை
யும் கச்சய நகரத் தரசனாகிய துச்சயனுக்கு மனைவியராகி
வாழ்ந்தனர். ஒரு நாள் மூவரும் மலை வளங் காணக் கங்
கைக் கரையை யடைந்த பொழுது, அங்கே அறவணவடி
கள், பாத பங்கய மலையைத் தரிசித்து மீண்டு வந்தனர்.

துச்சயன் அவருடைய திருவடிகளை வணங்கி, 'தேவரீர்
எங்கிருந்து எழுந்தருளுகின்றீர்? யாங்கள் புரியும் பணி
விடைகள் உளவேல் அருள் புரிக. அன்போடு அவற்றை
நிறைவேற்றுகின்றோம்,' என வேண்டி நின்றான். அறவண

வடிகள், 'நான பாத பங்கய மலையைத் தரிசனஞ் செய்து' வருகின்றேன்.

> ' ஆதி முதலவன அறவாழி ஆளவோன்
> மாதுயா எவ்வம மககளை நீககி
> விலஙகுந தமமுள் வெரூஉமபகை நீக்கி
> உடஙகுயிர் வாழ்கஎன றுள்ளங கசிந்துகக
> தொன்று காலதது நின்றற முரைதத
> குன்ற மருஙகிற குறறங கெடுககும
> பாத பஙகயங கிடததலின் ஈஙகிது
> பாதபங் கயமலை எனும்பெயரா தாயது;
> தொழுது வலஙகொள வந்தேன் ஈஙகுப
> பழுதில காட்சியீர் நீருந தொழுமென,'

அம்முனிவா மொழிப்படியே மூவருஞ சென்று பாத பங்கய மலையைத் தரிசனஞ் செயதனா. அநதத் தரிசன விசேடத்தால் அப்பெண்டிர் இருவரும், மாதவியும் சுதமதியுமாகி உன்னுடன் சேர்ந்தனர். இபபொழுது நீ உன் பழம்பிறப பின இயல்பும், தருமததி னியலபும் நனகறிந்தனை. இனி ஒரு காலத்தில பறபல சமய உண்மைகளை அறிவாய, அவற்றை நீ அறிய விருமபுமபோது, உனனை இளமைப பருவததினள் என்று நினைதது, அசசமயததவாகள தங்கள மத உண்மைகளை உரைககமாட்டாாகள. ஆகலின், வேற்று வடிவங் கொள்வாயாக,' எனக் கூறி, நினைததபோது வேற்றுருவை அளிபபதும், ஆகாய வழியே செலலுதறகு உதவுவதுமாகிய இரண்டு மந்திரங்களை அவளுககு உபதேசிதது, 'நீ புத்த தேவர் அருளிய அறவழியை அடைதல துணிபு என்று உணர்வாய்! இப்பீடததை வணங்கி உன ஊா புகுவாய்,' எனப் பணித்துச சென்ற தெய்வம் மீண்டும் வந்து, 'மணிமேகலையே, இன்னுமொன்று சொலல மறந்தேன்; அதனையுங் கொளக: மக்கள் உடம்பு உணவின் தொகுதியாகும். இங்

மந்திரம் பசிப்பிணியை ஒழிக்கும்', என்று கூறிப் பசிப்பிணியை ஒழிக்கும் மந்திரத்தையும் அவளுக்கு உபதேசித்தது. அந்தர வழியே சென்றது.

## 12. பாத்திரம் பெற்ற காதை

மணிமேகலாதெய்வம் நீங்கியபின், மணிமேகலை, மணிபல்லவத்திலுள்ள வெண்மணற் குன்றுகளையும் விரிந்த பூஞ்சோலைகளையும், பசிய இலைகள் நிரம்பிய தாமரைத் தடாகங்களையும் கண்டு களித்துச் செல்வாளாயினள். அப்பொழுது அப்புத்த பீடத்தை இந்திரனேவலால் காத்துவந்த தீவதிலகை என்னுந் தெய்வப் பெண், மணிமேகலை முன் வந்து, 'யாருந் துணையின்றி இவ்விடத்தில் தனியாக நிற்கின்ற நீ யார்?' எனக் கேட்டாள்.

மணிமேகலை, 'பூங்கொடி போல்வாய், நான் முற்பிறப்பில் இராகுலன் என்னும் அரச குமாரருக்கு மனைவியாக இருந்தேன், அப்பொழுது இலக்குமி என்னும் பெயருடையேன்; இப்பிறப்பிற் காவிரிப்பூம்பட்டினத்தில் நாடகக் கணிகையாகிய மாதவிக்கு மகளாயப் பிறந்தேன், மணிமேகலை என்னும் பெயருடையேன். என் பெயர் கொண்ட தெய்வம் என்னை இத்தீவிற் சேர்த்தது. யான் இங்குள்ள புத்த பீடத்தைக் கண்டு என் பழம்பிறப்பை யறிந்தேன். இதுவே என் வரலாறு. பொற்கொடியனையாய், உன் வரலாறு யாது?' என்று கேட்டனள்.

தீவதிலகை, 'இத்தீவிற்கு அயலில் இரத்தினத் தீவம் ஒன்று உளது. அவ்விடத்தில் மிக உயர்ந்து விளங்குகிற சமந்தகூட மலையின் உச்சியில் ஒரு புத்த பீடம் இருக்கின்றது. நான் முன் ஒரு காலத்தில் அவ்விடஞ் சென்று அப்

பீடத்தைத தரிசனஞ்செய்துகொண்டு இவ்விடம் வந்தேன், அது முதல தேவேந்திரன கட்டளையால இப்பீடத்தைக் காததுக்கொண்டிருக்கிறேன என் பெயர் தீவ திலகை எனபது புதத தேவர் அருளிய நல்லற வழியைப் பற்றி நடபபோர் யாராவது இபபீடததைக காண்பாராயின, உடனே அன்னார பழம்பிறபபை அறிவா இஃதுணமை எனினும், அவவாறு பெறுவார உலகில மிகச சிலரே அவர்கடகே தருமபதம உரியது. நீயும இபபீடததைக கணடு, உன் பழமபிறப்பை உணர்ந்தாய அதனை, நீ பெரியை இபபீடிகைககு முன், மாமலாக குவளையும, நெயதலும மலிந் திருககிற கோமுகிப் பொய்கை ஒனறு உளது அபபொய் கையிலிருந்து ஆண்டிறகு ஒரு முறை அமுத சுரபி எனனும் பெயரையுடைய ஓா அட்சய பாததிரந் தோன்றும். அது தோனறுங் காலம் புதத தேவா அவதரிதத காலமாகிய வைகாசிப் பௌர்ணமை நாளாகும. இததினம அந்நாளே. ஆதலின, அப்பாததிரம் தோன்றும் வேளையும் இதுவே. இப பொழுது அஃது உன கையில வருமெனறு எணணுகிறேன். அபபாததிரததில இடப்படட அன்னம, இரவலாக்கு இலலை என்னாது கொடுக்கும் உள்ளமுடைய பெரியோர் செலவம்போல, எடுக்க எடுகக வளர்ந்துகொணடே யிருக் கும். அதன் முழு வரலாறறையும அறவணவடிகள்பாற் கேட்பாயாக,' என்று சொல்ல, மணிமேகலை அப்பாததிரத் தைதத தான் பெறவிருமபிய புததபீடத்தை வலம்வந்து வணங் கித தீவ திலகையுடன் கோமுகிப் பொய்கைக் கரையை யடைந்தாள். அப்பொழுது அட்சய பாத்திரம் பொய்கையி லிருந்து வெளியே தோன்றி, மணிமேகலையின் கையில வந்து தங்கியது. பாத்திரம் பெற்ற பைங்கொடியனைய மணிமேகலை அளவில்லாத ஆநந்த மடைந்து, புத்த தேவன் பொன்னடி

'மாரனை வெல்லும் வீர நின்னடி
தீநெறிக் கடும்பகை கடிந்தோய் நின்னடி
பிறர்க்கற முயலும் பெரியோய் நின்னடி
துறக்கம் வேண்டாத் தொல்லோய் நின்னடி
கண்பிறர்க் களிக்குங் கண்ணோய் நின்னடி
வாய்மொழி சிறந்த நாவோய் நின்னடி
வணங்குத லல்லது வாழ்த்தலென் னாவிற்கு
அடங்காது'

என்று துதித்து வழிபட்டாள். இவ்வாறு துதித்து வழிபட்ட மணிமேகலைக்கு உயிர்கள் பசியால் அநுபவிக்குந் துன்பத்தையும், அதைத் தீர்ப்பார்க்கு உண்டாகும் பெருமையையும் தீவ திலகை சொல்லத் தொடங்கி, 'பசி நோயானது தன்னை யடைந்தவர்களுடைய உயர் குடிப் பிறப்பை அழிக்கும், சிறப்பையுங் குறைக்கும், அன்றி உணர்ந்த கல்வியையுங் கெடுக்கும். இதுபற்றியே,

'பிறந்த குலமாயும், பேராண்மை மாயும்
சிறந்ததங் கல்வியு மாயும்.'

எனப் பசியால் விளையுந் துன்பங்களைப்பற்றிப் பெரியோர் சொல்லியிருக்கின்றனர். அப்படிப்பட்ட பசிப் பிணியை ஒழிப்போர் அடையுங் கீர்த்தி இவ்வளவினதென்று சொல்ல என்னால் முடியாது! முன் ஒரு நாள் மழை வளஞ் சுருங்கிப் பஞ்ச முண்டாக, எங்குந் தேடியும் உணவு கிடைக்காமல், பசித் துன்ப மிக்க கௌசிக முனிவர் நாயின் ஊனை உண்ண விரும்பி, முதல் முதலாக அதிலொரு பங்கைத் தெய்வங்கட்குப் பலியிட, அதை யறிந்த தேவேந்திரன் மழை பெய்வித்தான். அதனால், உலகம் செழித்த தென்பர். இதனை நீயுங் கேட்டிருப்பாய். ஆதலால், உயிர்களுடைய பசிப் பிணியைத் தொலைத்து, இன்முகங் கண்டு களிப்பாயாக' என்று சொன்னாள்.

மணிமேகலை இங்ஙனங் கூறிய தீவ திலகையை நோக்கி, "யான் முற்பிறப்பில் என் கணவராகிய இராகுலன் திட்டிவிட மென்னும் பாம்பினால் இறந்த துயரம் பொறாமல், தீயிற் பாய்ந்து உயிரோடு வேவாநிற்கையில், சாதுசக்கர முனிவரை உண்பித்தது என் நினைவுக்கு வந்தது. இறக்கும் பொழுது எனக்கு அந்நினைவு தோன்றியதால், அதன் பயனாக இன்றும் இப்பாத்திரம் என்னிடம் வந்ததென்று எண்ணுகிறேன். இது நிற்க. முன் செய்த தவத்தின் பயனாற் செல்வர்களாக வாழ் கின்றவர்களுடைய புறங்கடையில், கிழிந்த துணியை அரை யில் உடுத்துக்கொண்டு வயிற்றைக் கொளுத்துகின்ற பெரும் பசியை ஆற்றாது முறையிட்டு, வெயிலென்றும் மழையென் றும் பாராமலும், ஓரிடத்திலும் நிலைத்திராமலும் அலைந்து மிக்க துன்பத்தை யடைந்து சோர்கின்றவர்களைக் கண்டு, தான் பெற்ற குழவியின் முகத்தைக் கண்டு பால் சுரக்குந் தாய்போல இவ்வமுத சுரபியி லிட்டப்பட்ட உயிர் மருந்தாகிய அமுதஞ் சுரந்து வளர்வதைக் காணும் விருப்ப முடையேன்,' என்று சொன்னாள். அது கேட்ட தீவ திலகை மிகவும் மகிழ்ந்து பாத்திரத்துடன் செல்ல அவளுக்கு விடை கொடுத்தாள். மணிமேகலை மீண்டும் அவளோடு சிறிது நேரம் அளவளாவிக் கொண்டிருந்து, புத்த பீடத்தை வணங்கித் தன் மந்திர வலி மையால் ஆகாய வழியே புறப்பட்டாள்.

மாதவி தன் மகள் வரவை எதிர்பார்த்துக்கொண்டே வெகு அரிதாக ஏழு நாட்களையுங் கழித்தாள். பின்பு, 'மணி மேகலைத் தெய்வம் உரைத்த ஏழு நாட்களும் கழிந்தன. இன்னும் என் மகள் வரக் காணேன்! யாது நிகழ்ந்ததோ!' என்று அவள் மயங்குங் காலத்தே, மணிமேகலை அவள்முன் தோன்றி, சுதமதியையும் மாதவியையும் மகிழ்வித்து, அவர்க ளுடைய பழம்பிறப்பை அவர்களுக்கு விளங்க உரைத்து, அவர்களை வணங்கி, 'இனி நீவிர் மக்களுடம்பாலடைய வேண்

டிய பயனை அறவணவடிகள்பால் கேட்டுணர்வீராக. என் கையிலுள்ள இஃது ஆபுத்திரன் கையிலிருந்த அமுத சுரபி எனனும் பெயரையுடைய அட்சய பாத்திரம். இதனைத் தொழுங்கள்,' என்றுரைத்து, அதனை வணங்கிய அவர்க ளோடும் அறவணவடிகளைத் தரிசிக்கச் சென்றாள்.

## 13. அறவணர்த் தொழுத காதை

மாதவியும் சுதமதியுமாகிய இருவருடனும் சென்ற மணி மேகலை, அறவணவடிகள் எழுந்தருளியிருக்கும் இடத் தையடைந்து, அவரடிகளைத் தொழுது, தான் சுதமதியுடன் கூடி உவ வனஞ் சென்றதும், உதய குமரன் தன்னை விரும்பி யடைந்ததும், தான் பளிக்கறையில் ஒளிந்து அவனுக்குத் தப்பியதும், மணிமேகலைத் தெய்வந்தோன்றித் தன்னை மணி பல்லவத்திற் சேர்த்ததும், ஆங்குத் தேவேந்திரனால் அமைக் கப்பட்ட புத்த பீடத்தைத் தான் கண்டதும், அத்தரிசன விசேடத்தால் தன் பழம்பிறப்புணர்ந்ததும், மணிமேகலைத் தெய்வந் தோன்றி இராகுலன் வரலாற்றைத் தனக்குரைத் ததும், அப்பிறப்பில் தன் தமக்கைமாராகவிருந்த தாரை யும் வீரையும் பின்பு முறையே மாதவியும் சுதமதியுமாகிப் பிறந்து தன்னோடு கூடியதும், அவர்களியல்பை அறவணவடி கள்பாற் கேட்டுணர்கவென அத்தெய்வம் உரைத்து மூன்று மந்திரங்களை உபதேசஞ் செய்ததும், அத்தெய்வம் நீங்கிய பின் அப்பீடத்தை இந்திர னேவலாற் காவல் செய்துகொண் டிருந்த தீவ திலகை எனனுந் தெய்வ மாதின் நட்புப் பெற்ற தும், அவளால் அட்சய பாத்திரத்தின் பெருமையை யறிந்து, கோமுகிப் பொய்கைக் கரையை யடைந்து, அப்பாத்திரந் தன் கையில் வரப்பெற்றதும், பின் அத்தெய்வம், 'உன் நக ரடைந்து, அமுத சுரபியின் வரலாறு முதலியவற்றை அற

வணவடிகள்பால் கேட்டுணர்க,' என்று விடை கொடுக்கத் தான் காவிரிப்பூம் பட்டின மடைந்ததுமாகிய எல்லாச் செய்திகளையும் விரித்து உரைத்தாள்.

இச்செய்திக ளனைத்தையும் கேட்ட அறவணவடிகள், மணிமேகலையினிடம் மகிழ்ச்சி யடைந்து, 'நான் முன்பு ஒரு நாள் பாத பங்கய மலையைத் தரிசித்து மீண்டு வரும் காலத்தில், கச்சய நாட்டு அரசனாகிய துச்சயனை ஒரு பூஞ்சோலையிற் கண்டு, 'மன்னவ, நீயும் நின் மனைவியரும் சுகமோ?' எனக் கேட்டேன். அவன் மனங் கலங்கி, 'என் மனைவியாகிய தாரை, மதுவுண்ட மயக்கத்தால் ஒரு யானை எதிர்ப்பட்டு இறந்தாள்! அத்துயர் பொறாமல் வீரையும் அரண்மனை நிலா முற்றத்திருந்து பூமியில் விழுந்து மாண்டாள்!' எனக் கூறிப் புலம்பினன். அச்சமயம் நான் அவனைத் தேற்றி, 'இது பழவினைப் பயனால் விளைந்தது. இதனை நினைந்து வருந்துத லொழிக.

'ஆண்டாண்டு தோறும் அழுது புரண்டாலும்
மாண்டார் வருவரோ மன்னவனே—வேண்டா'

எனக் கூறிப் போயினேன். அத்தன்மையையுடைய நீவிர் இருவீரும் மாதவியும் சுதமதியுமாகிக் கூத்தர் மாறுவேடம் பூண்டதுபோல இங்கே தோன்றினீர்,' என்று அவ்விருவரையும் பார்த்துக் கூறிய பின்னும் மணிமேகலையை நோக்கி, 'இவ்வுலகத்தில் தருமங்கள் குறையப் பாவங்கள் மலிந்தன. ஆயினுஞ் சிறிதளவேனுந் தருமம் வளருமென்ற நோக்கத்துடன், யான் பௌத்த தாமங்களை மக்களுக்குப் போதித்து வருகின்றேன். உலக மாந்தர் இதனை ஒரு சிறிதும் உணர்கின்றிலர். இதையறிந்த சக்கரவாளக் கோட்டத்தி லுள்ள தேவர்கள் வேண்டுகோளால், துஷித லோகத்தில் எழுந்தருளிய பகவான் புத்தராக அவதாரஞ் செய்வார். அவர் அவதரிக்குங் காலத்தில் வான் முகில் வழாது பெய்யும்; மண்

னுலகம வளம் பெறும், மக்கள் துனபம் இனறி இன்புடன் வாழ்வார்கள்; கடலும் பல வளங்களைத தரும், யாவர்க்கும் அருளறங்களில மனஞ் செலலும், இனனும் பல நன்மை களும் விளையும. ஆதலால, நான என்றும் அவரடியையே தொழுகின்றேன,' என்று சொலலிப பின்னும், 'மணிமேகலை, உனனால இவவூரிற் பல புதுமைகள் நிகழும் அவை நிகழ்ந்த பின்னனறியான உரைக்கும அறவுரைகள் உன செவியிற் புகா. இவவிருவரும் முறபிறபபில பாத பங்கய மலையைத் தரிசித்த விசேடததால, இப்பிறப்பில் பௌதத தருமததைக் கைப்பற்றி உனனைச சேர்ந்தனர். ஆதலின, இவர்கள மேன்மை யடைவார்கள். நீ ஆபுததிரனது அமுத சுரபியைப் பெற்று, யாவருககும் ஒத்ததாகிய பசிபபிணியை ஒழிக் குந் தருமததை மேறகொண்டு ஒழுகுவாய,' என்றனர். அவளு மவரைத தொழுது, 'அப்படியே செய்வேன,' என்றாள்.

## 14. ஆபுத்திரன் திறம் அறிவித்த காதை

பினபு அறவணவடிகள மணிமேகலைககு ஆபுததிரன வரலாறு கூறுவா ராயினார்:

'வாரணசி என்னும் ஊரில வேதம் ஓதுவிக்குந் தொழிலையுடைய அபஞ்சிகன் எனனும் அந்தணன் ஒருவன இருந்தான். அவனுககுச சாலி எனனும் பெயரையுடைய மனைவி யொருததி இருந்தாள். அவள் ஒழுக்கந் தவறியவள். அதனால, அவள் தன் பாவததைப போககு எண்ணித் தான கருப்பவதியாக இருப்பதையும கருதாது குமரிக்கு நீராடச் சென்றாள்; செல்லும்போது இடைவழியிற் சூலால் வருந்தி ஓர் ஆண் மகவைப் பெற்று, அக்குழவியிடத்திற் சிறிதுங் கருணை யில்லாமல, பெற்ற அவ்விடத்திலேயே அதனை விட்டு அகன்றாள்.

'தாய் நீங்கியவுடன் அவ்விளங்குழவி பசியால் வருந்தி யழுதது. அவ்வழுகுரலைக் கேட்டு, அங்கிருந்த ஒரு பசு வானது அவ்விடம் வந்து, அக்குழந்தையைத் தன் நாவி னால் நக்கிப் பாலூட்டி, ஏழு நாளவரையிற் காத்துக்கொண் டிருந்தது.

'அப்போது அவ்வழியே வந்துகொண்டிருந்த பூதி யென்னும் பெயருடைய ஒரு பார்ப்பானும், அவன் மனை வியும் அதைக் கண்டனர். அந்தணன் அக்குழந்தையின் நிலைமைக்கு இரங்கி, 'இச்சிறுவன் பசு மகனல்லன், இன்று முதல் என் மகனே யாவன்,' என்று சொல்லித் தன்னூராகிய வயனங்கோட்டிற்குக் கொண்டு போய் வளர்த்து வந்தான்; பின்பு அம்மகனுக்குத் தான் செய்ய வேண்டிய கடமைகளை எல்லாம் வெகு சிறப்பாகச் செய்து, கல்வியுங் கற்பித்தான். அச்சிறுவன் ஆவினால் தரிக்கப்பட்டதால், ஆபுத்திரன் எனும் பெயர் பெற்று வளர்ந்து வருநாளில் ஒரு நாள், அவ் வூரில் ஓர் அந்தணன் வீட்டில் யாக சாலையி னருகே ஒரு பசுவைக் கொம்பிற் பூவைச் சுற்றித் தூணிற் கட்டியிருப் பதைப் பார்த்தான். அப்பசு, தனக்குப் பின்னர் உண்டாக விருக்கும் நிலைமையைக் குறித்துக் கதறியது; ஆபுத்திரன் அதனைக் கண்டு நெஞ்சுருகி, அதனை அத்துன்பத்தினின்றும் மீட்க நினைத்து, இரவில் யாரு மறியாதபடி அப்பசுவை அவிழ்த்து ஓட்டிக்கொண்டு காட்டை நோக்கிச் சென்றான்.

'யாகஞ் செய்தற்குரிய பசுவைக் காணாது, அந்தணர் கள் மிகுந்த துன்பமுற்று, நாற்புறமுந் தேடிக் காணாமல், காட்டை நோக்கி ஓடினார்கள், அவ்விடத்தே ஆபுத் திரனையும் பசுவையுங் கண்டு, அவனுடைய எண்ணத்தை யறியாதவர்களாய், அவனைப் பார்த்து, 'கள்வனே, யாகத்திற் குரிய பசுவை நீ ஏன் கவர்ந்தாய்?' என்று கடுமையாகக் கேட்டுக் கோலால் அடித்தார்கள். அவன் துன்பத்தைக்

கண்ட பசு வெகுண்டு, அவ்வந்தணர்களில் ஆபுத்திரனை
அதிகமாக வருததினவனை முட்டி அவன குடரைச சரித்துக்
காட்டை நோக்கி ஓடிவிட்டது.

'பின்னா ஆபுததிரன அவாகளை நோககி, 'வீணாக
என்னை வருததாமல என மொழியைக கேளுங்கள்: நீங்கள்
வருததுமபடி அபபசு உங்கட்குச செய்த இடர் யாது?
புல்லுள்ள தரையைத தானே சென்றடைந்து, வயிறுர மேய
ந்து, தண்ணீர குடிதது, மககளுயிர்க்கு அமிரதம் போனற
பாலைச் சுரந்து கொடுக்கும் அபபசுவிடதது உங்கட்கு வந்த
கோபம் என்னை? சொல்வீாகளாக,' என்று கேட்டான் அவா
கள், 'நீ பிரமதேவ ரருளிய வேதத்தை யறியாமல, யாகத்தை
இழிவுபடப் பேசுகின்றாய். நீ கீழ்மகன என்பதில ஐயமே
யில்லை ஆபுததிரன எனும் பெயர் உனககே தகும்!' என்று
இகழ்ந்துரைததாாகள ஆபுததிரன் மீண்டும் அவாகளைப்
பார்தது, 'நீங்கள என்னை இகழ்வது மிக நன்றாயிருககிறது!
உங்கள் முன்னோர்களாகிய முனிவாகளெலலாம் புலியினிடத
தும், நரியினிடததும, மானிடத்துந் தோன்றினாகளென்று
நூலகள சொல்லுவதை நான் அறியேனோ? அவவாறிருக்க,
எனக்கு வந்த இழிவு யாது?' எனக் கேட்டான்.

'அபபொழுது அங்கு நின்ற அந்தணாகளில ஒருவன்,
'இவன் பிறபபின வரலாற்றை யானறிவேன: முன ஒரு
காலததில் இளைத்த மேனியையும், வழி நடந்த அயர்வையும்
உடைய ஒரு பார்பபனி, வேதவிதிப்படி கன்னியாகுமரிக்குச்
சென்று, நீராடி மீண்டு வருங் காலததில் அவளைக கண்டு,
'நீ யார்? உன ஊர் யாது? நீ யாருமின்றித தனியே வந்தது
ஏன்?' எனக் கேட்டேன. அவள், 'யான வாரணாசி என்னும்
ஊரில் வேதம் ஓதுவிப்பவனாகிய அபஞ்சிகனென்னும் அந்
தணன் மனைவி. என் பெயர் சாலி என்பது; கற்பு நிலை
குலைந்து கணவனால் வெறுக்கப்பட்டேன்; அப்பாவங்

தொலையக் குமரிக்கு நீராடச் செல்லும் இடை வழியில், கொற்கை நகரத்துக்கப்பால ஒரு காத தூரததிலுள்ள ஆயர் பாடியில ஓர் ஆண் மகவைப் பெறறு, அதனை அவ்விடமே விட்டு அகனறேன்; இததகைய பாவியாகிய எனக்குத் திக்கதி யன்றி நற்கதியும் உண்டோ?' எனப் புலம்பினுள். அசசாலி யின் மகனே இவன. இதுவரையில் இதைச சொல்வதாற் பயனில்லை என்று சொலலாமலிருநதேன். இவன மிகவும் அசுத்தன், தீண்டத் தகாதவன்,' எனக் கூறினன்.

'அதைக் கேட்ட ஆபுததிரன் நகைத்து, 'உங்கள் முனி வர்களிற் சிறந்தோர்களாகிய வசிஷ்டரும், அகஸ்தியரும் பிரம தேவன் திலோத்தமையைக் கண்டு காதலித்தபோது அவ ளிடம் பிறந்தாரகளென்பதை நீங்கள் அறியீர்களோ! நீங்கள் இலலை என்றாலும் அசசெயதி பொயயாகுமோ? அப்படி யிருக்கச சாலிக்குத் தவறு கூறப் புகுந்தீர்களே! இது மிக அழகாயிருக்கிறது!' எனறு ஏளனஞ் செய்தான். அவன் இங்ஙனங் கூறியதைக கேட்ட அவனை ஆதரிதத பூதி என் பவனும் அபபொழுதே அவனை விலககிவிட்டான்.

'ஆபுததிரன் பினனர்ப் பிசசை யேற்றுண்ணக் கருதிப் பாததிரங் கொண்டு வீடுகள்தோறுஞ் சென்றான்; அந்தணர் கள், 'ஆவைக கவர்ந்த கள்வ னிவன!' எனறு அவன் பாத் திரத்திற் கல்லைப் போட்டார்கள். அதனல், அவன் அவ் வூரை நீங்கித தென்றிசையிலுளள மதுரை நகரை யடைந்து, பிசசைப் பாததிரததைக் கையிலேந்தி, வீடுதோறுஞ் சென்று ஐயமேற்றுக கொண்டு வந்த வுணவைக் குருடர், செவிடர், முடவர், நோயாளிகள், ஆதரவில்லாதவா ஆகிய இவர்களுக் கிட்டு, மிகுதியைத தானுண்டு, சிந்தா தேவியின கோயிலாகிய கலை நியமத்தின் முன்னுள்ள அம்பலத்தில் தங்கிக் காலங் கழித்து வந்தான்.

## 15. பாத்திர மரபு கூறிய காதை

'ஆபுத்திரன் இவ்வாறு காலங் கழித்துவருநாளில், ஒரு நாள் அவன் உறங்குஞ் சமயத்தில், பசிப்பிணியால் இளைப்புற்ற சிலர் அவனை யடைந்து உணவு கேட்டனர். அவனிடத்தில் அப்பொழுது சிறிதும் உணவுப்பொருள் இல்லாமையால், அவன் வருத்தமுற்று நின்றான். அவனது நிலையை யறிந்த சிந்தா தேவி (கலைமகள்) அவன் முன் தோன்றி,

> 'எடா! அழியல்; எழுந்திது கொள்ளாய்:
> நாடு வறங்கூரினும் இவ்வோடு வறங்கூராது;
> வாங்குநர் கையகம் வருந்துத லல்லது
> தான்தொலை வில்லாத் தகைமைய தது.'

என்று கூறித் தன் கையிலிருந்த ஒரு பாத்திரத்தை அவன் கையிற் கொடுத்தனள். ஆபுத்திரன் மகிழ்ச்சி யடைந்து, அப் பாத்திரத்தைக் கையிற் பெற்று அத்தேவியை மன மொழி மெய்களால் வணங்கி, அப்பாத்திரத்தினின்றும் அன்னத்தை எடுத்து, அங்கு வந்தவர்களின் பசித்துயர் போக்கினான்; அது முதல் நாடோறும் எல்லா வுயிர்களுக்கும் வேண்டிய உணவளித்துத் தானும் உண்டு, அவ்விடத்திலேயே யிருந்தான்.

'இவ்வுலகத்தில் தானம் சீலம் முதலியவற்றிற் சிறந்த பௌத்தர்கள் யாரேனும் இருந்தாலும், அவர்கட்குப் பிறரால் ஏதேனுந் தீங்கு நேரிட்டாலும், தேவேந்திரனுடைய பாண்டு கம்பளம் என்னும் ஆசனம் நடுங்குமென்றும், அவன் அக் குறிப்பால் அதை யறிந்து வந்து, அவர்கட்கு வேண்டிய நன்மை புரிவான் என்றும் சொல்வது சைன மத சம்பிரதாயமாகும். இம்முறைப்படியே ஆபுத்திரனுடைய தானத்தின் மிகுதியைத் தேவேந்திரன் தனது பாண்டு கம்பள நடுக்கத்தால் அறிந்து, ஒரு முது வேதியன் வடிவம் பூண்டு, ஆபுத்-

திரனிருக்கும் இடத்தை யடைந்து, 'நான் இந்திரன், உனது புண்ணிய மிகுதிக்கு ஏற்ற வரமளிக்க வந்தேன். வேண்டும் வரங்களைக் கேள்,' எனக் கூறினன்.

'ஆபுத்திரன் இந்திரனை நோக்கி மிக நகைத்து, 'அறஞ் செய்வாரும், தவம் புரிவாரும், ஆசையைத் துறக்க முயல்வாருமன்றி, வினைப் பயனை நுகர்வார்க்கே வாழிட மாகிய வானுலக மன்னனே, கேள் பசிப்பிணி வருத்த முகஞ் சுருங்கி வந்தவர்களின் பசி நோய் தொலைத்து, அவர்களது மலர்ந்த முகத்தைக் கண்டு களிக்கும் பேறு ஒன்றே எனக்குப் பெரும்பேறு. ஆதலின், நீயளிக்கும் வரங்களை நான் விரும்புகிலேன்,' எனக் கூற, இந்திரன் நாணித் தன்னுலகடைந்தான்.

'பின்னர் ஆபுத்திரன் தன்னை மதியாது செருக்குடனுரைத்த மொழிகள் தன் மனத்தைச் சுட, இந்திரன் அது பொறுஞகிக் கடுஞ்சினங் கொண்டு, ஆபுத்திரனுடைய அகந்தையை நீக்கக் கருதி, நாடெங்கும் மழை பெய்வித்தான். அதனால், தேசஞ் செழித்து, எல்லாப் பொருள்களும் விளைந்து, மக்கள் நல்வாழ்வு பெற்றார்கள். அதனால், ஐயமேற்பார் ஒருவரு மிலராயினர். ஆகவே, ஆபுத்திரன் மிக்க கவலை கொண்டு, ஊர்தோறுஞ் சென்று, 'உண்பவர் யாரேனும் உளரோ?' எனப் பன்முறை வினவியும் ஒருவரும் அவனை மதித்து அவனிடம் வரவே யில்லை. அப்பொழுது அவன், 'பழுத்த மரத்தைப் பறவைகள் தேடி யடைவது போல நம்மை விரும்பி யடைந்த மக்கள் யாவரும் இன்று நம்மை விரும்பா தொழிந்தனரே!' என்று நினைத்துப் பெரும் பொருள் இழந்தவனைப் போலத் துன்பமுற்றுத் தனியே செல்வானாயினன். அங்ஙனஞ் சென்ற ஆபுத்திரனைச் சாவக நாட்டிலிருந்து வந்த சிலர் கண்டு, சாவக நாடு மழை வளங் குறைய, மக்கள் பசியால் வாடுகின்றார்கள். ஆண்டுச் செல்வாய்,' எனக் கூற, அவன் அப்பொழுதே சாவக நாடு செல்

னுங் கப்பலில் ஏறிச் சென்றான். அவனேறிச் சென்ற கப்பல் இடையிலுள்ள மணிபல்லவம் என்னுந் தீவின் ஓரத்தில் ஒரு நாள் தங்கியது. ஆபுத்திரன், 'கப்பல் புறப்படும்போது ஏறிவிடலாம்,' என்று நினைத்து, அதை விட்டு இறங்கினான். அன்றிரவு ஆபுத்திரன் கப்பலில் ஏறுவதற்கு முன்னரே, மீகாமன் அவன் ஏறிவிட்டதாக நினைத்துக் கப்பலைச் செலுத்திவிட்டான். பிறகு ஆபுத்திரன் வந்து பார்க்கக் கப்பல் போய்விட்டது. ஆதலால், அவன் ஆற்றொணாத் துயரடைந்து, 'பலருடைய பசிப்பிணியை நீக்கும் இப்பாத்திரத்தை யாருமில்லாத இத்தீவில் வைத்துக்கொண்டிருந்து என் பசியைப் போக்கி உயிர் வாழ்தலினும், இறப்பதே நலம்,' என முடிவு செய்து, அப்பாத்திரத்தை அவ்விடத்தி லுள்ள கோமுகி பொய்கையில் இட்டுப் பட்டினியாக இருந்து உயிர் துறக்கக் கருதி, அப்பாத்திரத்தைத் தொழுது, 'நீ ஆண்டிற்கொரு முறை வெளியே தோன்றுக; தருமஞ் செய்வோர் யாரேனும் அப்பொழுது வருவாராயின், அவர் கையிற் புகுதுக,' என வேண்டி, அதனைப் பொய்கையில் எறிந்தான். நான் அச்சமயம் மணிபல்லவ மடைந்ததனால், அவன் தன் வரலாறுகளை என்னிட முரைத்து, மணிபல்லவத்தில் தன்னுடம்பை யொழித்துச் சாவக நாட்டரசனுடைய பசுவின் வயிற்றில் ஓர் ஆண் மகவாகத் தோன்றினான்.

## 16. பாத்திரங் கொண்டு பிச்சை புக்க காதை

'முனைவர் கூறியவாறு, சாலியின் மகனுக்கு ஏழு நாள் பாலூட்டி வளர்த்த பசுவானது சாவக நாட்டில் தவள மலையின்மேல் தவஞ் செய்துகொண்டிருந்த மண்முக முனிவரிடத்திற் பொன்னிறமாகிய கொம்புகளையும் குளம்புகளையும் உடையதாய்ச் சென்று, கன்றினை ஈனுவதற்கு முன்னேயே பால் சுரந்தளித்து, மன்னுயிர்களைப் போற்றி வந்தது.

'முக்காலத்தையும் உணரும் மண்முக முனிவர் அதனைப் பார்த்து, 'இப்பசுவின் வயிற்றில் ஓர் ஆண் மகன் பிறப்பான். ஆனால், அவன் மற்றவர்களைப் போலக் கருப்பையில் தோன்றாது, பொன்னிறமான முட்டையிலிருந்து தோன்றுவான்,' என மொழிந்தார். நோய் முதலியவற்றால் யாதொரு துன்பமு மடையாதிருந்தும், புண்ணியஞ் செய்தலையே முக்கிய நோக்கமாகக் கொண்டு, பட்டினி கிடந்து மணிபல்லவத்தில் உயிர் நீத்த ஆபுத்திரன், குழவிப் பருவத்தில் தனக்குப் பாலூட்டி வளர்த்த பசுவை என்றும் உளத்திற் கொண்டிருந்தானாகலின், மண்முக முனிவர் மொழிந்தவாறே புத்தர் பெருமான் அவதரித்த வைசாக சுத்த பௌர்ணிமையிற் பசு வயிற்றிற் பிறந்தான். அந்நாளில் உலகிற் பல நற்குறிகள் நிகழ, அவற்றைக் கண்ட சக்கரவாளக் கோட்டத்தி லுள்ள முனிவர்கள் கந்திற்பாவையை யடைந்து வினவினார்கள். அப்பாவை அவர்களை நோக்கி, 'மணிபல்லவத்தில் உயிர் விட்ட ஒருவன், சாவக நாட்டில் உள்ள தவள மலையில் வாழும் மண்முக முனிவரிடத்தில் இருக்கின்ற ஒரு பசு வயிற்றிற் பிறந்தான். அவனியல்பை அறவணர்பாற் கேட்பீராக,' என்றுரைக்க, அவர்கள் என்னிடம் வந்து கேட்டார்கள். அன்றும் யான் இவ்வரலாற்றை அவர்கட்கு உரைத்தேன்.

'இஃது இவ்வாறாக, சாவக நாட்டரசனாகிய பூமி சந்திரன் என்பான், தனக்கு மகப்பேறின்மை கருதி, 'எனக்குப்பின் இந்நாடு மன்னவனின்றி மறுகுமே!' என்று கவலை கொண்டு, மண்முக முனிவரை வேண்டி, அம்மகனைப் பெற்று வளர்த்து வந்தான். இன்று அவனே அரசுரிமை எய்திச் சாவக நாட்டை ஆள்கின்றான். இது நிற்க.

'இச்சோழ தேசம், வருநாள் என்றும் பிழையாத் தெய்வப் பொன்னி வளமுறப் பாய்ந்து செழிப்புறச் செய்யும் நாடாக இருந்தும், எக்காரணத்தினாலோ மக்கள் வறுமையடைந்து வாடுகின்றார்கள். ஆதலால், மணிமேகலாய், நீ இக்காலத்தில் மிக்க பயன் விளைப்பதாய இவ்வமுத சுரபியைப் பயனின்றி வைத்திருப்பது தகுதியன்று,' எனப் புகன்றார்.

அறவணவடிகள் இவ்வாறுரைத்த மொழிகளைக் கேட்ட மணிமேகலை அப்பொழுதே பாத்திரத்தைக் கையிலேந்தி, அவரை வணங்கி விடை பெற்றுப் பிக்குணிக் கோலத்துடன் வீதியை யடைந்தாள். உச்சயினி நகரத்தை யாண்ட **பிரச்சோதனன்** என்னும் அரசன், வத்தவ நாட்டரசனாகிய உதயணனை வஞ்சனையாற் சிறைப்படுத்திய பொழுது, அவ்வரசனை மீட்டுக்கொண்டுபோக வேற்றுருவந் தாங்கி உச்சயினி நகரத்தின் வீதி வழியே சென்ற யூகி என்பவனைச் சூழ்ந்து கொண்டவர்களைப் போல, எல்லாரும் மணிமேகலையைச் சூழ்ந்துகொண்டு, 'நமது அரசகுமாரனாகிய உதய குமாரனாற் காதலிக்கப்பட்ட இவள், யாவருங் காணப் பிக்குணிக் கோலத்துடன் வீதியிற் செல்வது மிக்க வியப்பைத் தருவதாகும்!' என்றுரைத்தனர். அப்பொழுது மணிமேகலை, 'கற்புடை மாதர் இடும் ஐயத்தையே முதலிற் பெறவேண்டும்,' எனக் கூற, அவளுடன் சென்ற **காயசண்டிகை** என்பவள் ஒரு மனையைச் சுட்டி, 'மழையைப் பெய்விக்குங் கற்புடைய மகளிரிற்

சிறந்த ஆதிரையின் வீடு அதுவாகும்! ஆண்டுச் செல்க,' என்று உரைத்துப் பின்னுங் கூறத் தொடங்கினாள் :

## 17. ஆதிரை பிச்சையிட்ட காதை

' இந்த ஆதிரையின் கற்பு மேம்பாட்டினைக் கூறுவேன் ; கேட்பாயாக. ஆதிரை வணிகர் குலத்திற் பிறந்தவள் ; நல்லொழுக்கம் நிரம்பப்பெற்றவள். இவளுடைய கணவனாகிய சாதுவன் என்பான், இவளைப் பிரிந்து ஒரு பரத்தையை விரும்பி, அவள் காரணமாகத் தன் பொருள் முழுமையுந் தொலைத்து, வறியனாகி, அவ்வறுமையின் கொடுமையைத் தீர்க்க நினைத்து, அயல் தேசத்திற்குக் கப்பலேறிச் சென்ற வணிகர்களுடன் சேர்ந்து போனான். அவன் ஏறிச் சென்ற கப்பல் பெருங்காற்றினால் மோதப்பட்டுக் கடலிற் கவிழ்ந்தது. அக்கப்பலிலிருந்த வணிகர்களிற் சிலர் மாண்டனர், வேறு சிலர், தமக்குக் கிடைத்த பாய் மரத்தைத் துணையாகக் கொண்டு காவிரிப்பூம்பட்டினம் வந்து சேர்ந்தனர். சாதுவனும் ஒரு பாய் மரத்தைப் பற்றிக்கொண்டு மிதக்க, அஃது அவனை நாகர்கள் வசிக்கும் ஒரு தீவினருகே ஒதுக்கியது. காவிரிப்பூம்பட்டினம் அடைந்த வணிகர்கள் ஆதிரையிடம் வந்து, கப்பல் கவிழ்ந்தமையால் சாதுவன் இறந்தானென்று சொல்லிப் போனார்கள். ஆதிரை அத்துன்ப மொழியைக் கேட்டு ஆற்றாளாகித் தன் உயிரையும் விட நினைத்து, மயானத்தில் உள்ள குழியில் விறகுகளை அடுக்கித் தீ மூட்டி, ' என் கொழுநர் சென்ற இடத்தை யானுஞ் சேர்வேன்,' எனக் கூறி, அத்தீயிற் குளித்தனள். அப்போது,

' படுத்துடன் வைத்த பாயற் பள்ளியும்
உடுத்த கூறையும் ஒள்ளெரி யுறாஅது
ஆடிய சாந்தமும் அசைந்த கூந்தலிற்

சூடிய மாலையுந் தொன்னிறம் வழாது
விரைமலர்த் தாமரை யொருதனி யிருந்த
திருவின் செய்யோள் போன்றினி திருப்பத்
'தீயுறு கொல்லாத் தீவினை யாட்டியேன்
யாது செய்கேன!' என்றவ ளேங்கலும்,'

ஆகாயத்தில், 'ஆதிரையே, உன் கணவன் கடலில் இறக்கவில்லை; உயிர் தப்பி நாகர் தீவில் வாழ்கின்றான், விரைவில் அங்கிருந்து வருவான். நீ கவலை யொழிக,' என்று ஓர் அசரீரி தோன்றக் கேட்டுத் துன்பம் நீங்கி வீட்டை யடைந்து, காதலன் வருகையை நோக்கிப் பல தான தருமங்கள் செய்துகொண்டிருந்தாள்.

'திசை தவறி நாகர் தீவையடைந்த சாதுவன், இளைப்பினால் அங்குள்ள ஒரு மர நிழலில் அயர்ந்து கண்ணுறங்கினான். ஆண்டு வாழும் நாகரிற் சிலர் அவ்விடம் வந்து பார்த்து, 'இவன் உடம்பு நமக்கு நல்ல உணவாகும்' என்று மகிழ்ந்து, அவனை எழுப்பினர். அவன் முன்னமே நாகருடைய பாஷையைப் பேசக் கற்றிருந்தானாகலின், எழுந்தவுடன் அவர்களோடு பேசினான். பேசிய பொழுது அவர்களுக்கு அவனிடமிருந்த கெட்ட எண்ணம் மாறி அன்பு வளர்ந்தது. அதனால், அவர்கள் அவனைத் தங்கள் குருவினிடம் அழைத்துச் சென்றார்கள். சாதுவன் தன்னுடைய சொல் வன்மையால் அக்குரு மகனையுந் தன் வசப்படுத்திக்கொண்டான். பிறகு அக்குரு மகன், நாகர்களை அழைத்து, 'புதியவனான இந்நண்பனுக்கு ஊனுங் கள்ளுங் கொடுத்து, இவன் பசியை ஆற்றுங்கள்,' எனக் கட்டளையிட, சாதுவன் அவனுடைய அறியாமைக்கு இரங்கி, நாகர்களை நோக்கிக், கள்ளுண்டல் முதலிய தீய செயல்களால் விளையுந் துன்பங்களையும், இழிவையும் எடுத்துரைத்து, பல நற்புத்திகளைப் புகட்டி, அவர்கள் அற நெறியில் ஒழுகுமாறு

செய்தான; பின்பு அக்குருமகன் அளித்த அகில, சந்தனம், துகில முதலிய பொருள்களைப் பெறறு, அவனிடம் விடையுங் கொண்டு, அவவழியாக வந்த சந்திர தத்தன் என்னும் வணிகனுடைய கபபலில் ஏறி, இவ்விட மடைந்து, தன வருகையை ஆவலுடன் எதிர பாாததிருந்த மனைவியுடன கூடி மகிழ்ந்து வாழ்வாளுயினன. ஆதலின, இததகைய சிறப்பு மிக்க ஆதிரையினிடத்திற சென்று முதலில ஐய மேறபதே தகுதி,' எனக் கூறி, மணிமேகலையை அவ்வீட்டிறகு அழைத்துச செலல, அவளும் உடன் சென்று, ஆதிரை வீட்டுத தலைவாயிலில் சித்திரம்போல அசைவறறு நினறுள. ஆதிரை மணிமேகலையைத தொழுது, 'பார முழுதும் உளள பசி நோய ஒழிக,' எனறுரைதது, அப்பாததிரம நிறைய அன்ன மிட்டாள்.

## 18. உலக அறவி புக்க காதை

ஆதிரை யிட்ட அன்னம் எடுக்க எடுக்கக குறைவுறாததை மணிமேகலை கண்டு, பசியால வாடிய அனைவரையும் உண்பிபபாளாளுள். இதனை யறிந்த காயசண்டிகையும் மணிமேகலையிடம் ஒரு பிடி சோறு வாங்கி உண்டாள்; அப்பொழுதே அவளைப்பற்றிய யானைத்தீ எனனும் நோயும் ஒழிந்தது, ஆகாய வழியே செல்லக் கூடிய மந்திரமும் அவளுக்கு ஞாபகம் வந்தது. அபபொழுது காயசண்டிகை மணிமேகலையைத் தொழுது, 'நான் ஒரு வித்தியாதரமாது, நான் வாழுமிடம் வித்தியாதர உலகத்திலுள்ள காஞ்சன புரமாகும். ஒரு நாள் யானும் என் கணவரும் தென்றிசையிலுள்ள பொதிய மலையின் வளங் காணச சென்றேம். இடை வழியில் ஒரு காட்டிலுள்ள ஆற்றங்கரையில ஒரு முனிவா தாம் நீராடிவந் துண்ணற்குத் தேக்கிலையில் வைத்துச சென்ற நாவற் கனியை என்

பழவினைப் பயனைக் காரணமாகக் காலாற் சிதைத்தேன். பின்பு சிறிது நேரத்திற்குள் விருச்சிகன் எனும் பெயருடைய அம் முனிவர் அவ்விடம் வந்து, கனி சிதைந்து கிடப்பதையும், அதற்குக் காரணமாக நிகழ்ந்ததையும் அறிந்து கடுஞ்சினங் கொண்டு, என்னை நோக்கி, 'நான் பன்னிரண்டு ஆண்டு பட்டினி யிருந்து, இன்று உண்ணுந் தினமாதலின், இக்கனியை உண்ண இவ்விடம் வைத்து நீராடச் சென்றேன். இக்கனியும் பன்னிரண்டாண்டிற்கு ஒன்றே பழுக்கும், இதனை உண்பவரைப் பன்னிரண்டாண்டு பசி அணுகாது. யானும் பன்னிரண்டு வருடத்திற்கு ஒரு தரமே உண்ணும் விரதமுடையேன். நீ சிறிதும் ஆலோசனையின்றி இத்தீமை செய்தாய். அதனால், ஆகாய வழியிற் செல்லும் மந்திரத்தை மறந்து, பன்னிரண்டு வருடங் கழியும் வரையில் யானைத்தீ எனனும் பெரும்பசியுடன் அலைந்து திரிவாயாக. மீண்டும் நான் உண்ணு நாளில் உன் பசி தொலையும்,' எனச் சாபமிட்டார். அப்பொழுதே எனக்குப் பெரும்பசி உண்டாயிற்று. என் கணவர் பல விதமான பழங்களையும் கிழங்குகளையுங் கொண்டு வந்து கொடுத்தும், என் பசி அடங்கவே யில்லை. அவர் அது கண்டு வருந்தி, என்னை உடனழைத்துச் செல்லவு முடியாமல், 'நீ பெருஞ் செல்வர்கள் வாழும் காவிரிப்பூம் பட்டினத்தை யடைந்து வாழ்வாய்,' எனக் கூறிப் போயினார். அது முதல் நான் இந்நகரத்தில் வாழ்கின்றேன். என் கணவர் ஆண்டுதோறும் நடக்கும் இந்திர விழாவுக்கு வந்து என்னைக் கண்டு வருந்திச் செல்வார். இவ்வாறு துன்புற்ற நான் இன்று உன் அருளால் இன்பமடைந்தேன். இனி யான் என் கணவரிடஞ் செல்ல எனக்கு விடை யளிப்பாய். இந்நகரில் முனிவர்கட்கு உறைவிடமாகிய சக்கரவாளக் கோட்டத்தில் உலக அறவி என்றோர் அம்பலம் உண்டு. அவ்விடத்திற் பசியால் இளைத்தவரும், துணை யாரு

மினறிப பிணிவாயப்பட்டு இரங்குவாருமாகிய பலா உணவு கொடுப்பாரை ஆவலுடன எதிர் பாாதது வருந்துகின்றனா. ஆகலின், நீ அவ்விடஞ் செல்க' எனக் கூறி மணிமேகலையிடம் விடை பெற்றுப் போயினர்.

காயசண்டிகை நீங்கிய பின்பு மணிமேகலை வீதி வழியே நடந்து சென்று, உலக அறவியைத் தொழுது, வலம் வந்து, அதனமேல் ஏறிச சம்பாபதித தெய்வததையும், கந்திற் பாவையையுந் துதிதது, கொடிய வெயிலால் வாடிய பூஞ்சோலையினிடையே நீல மேகந தோனறியது போல, இளைத்த மககளினிடையே தோன்றி, 'இப்பாததிரம் ஆபுத திரன் கையில் இருந்த அமுத சுரபியாகும. உண்ணும் விருப்புடையாா யாவரும வருக,' எனக் கூவி யழைதது, வந்த வர்களின் பசிப்பிணியைத தொலைததாள. அதனால், உலக அறவியில உண்பவாகளின் அரவமே மிகுந்திருந்தது

## 19. உதய குமரன் அம்பலம் புக்க காதை

மாதவியின் அன்னையாகிய சித்திராபதி, மணிமேகலை தவ வேடம் பூணடு பிசசைப பாததிரம் ஏந்தி உலக அறவி யடைந்ததைக் கேட்டுக கொதிதத உள்ள முடையளாய், 'மணிமேகலை கொணட இவவேடததை மாறறுவேன' என்று நிசசயித்துக்கொண்டு, நாடகக் கணிகைமார்களை நோக்கி, 'கோவலன இறந்த துயரம் பொறாது மாதவி முனிவர் வாழும் பள்ளியை யடைந்தது நகைபபுக்கிடமாயிருக் கின்றது. யாம் காதலன் இறந்தது பொறாமல நெருப்பில் மகிழ்ந்து குளிதது உயிர் துறக்கும் பத்தினிப பெண்டிா அல்லேம் ; பாணன் இறந்த காலையில் அவனோடு இறவாத யாழின் தன்மையை யுடையேம்; மலாகளில் மொய்த்து அவற்றி லுள்ள தேனை மாத்திரம் பருகிச செல்லும் வண்டு

ளைப்போன்ற இயல்புடையேம், நல்வினை நீங்கிய காலத்துப் பிரிந்து செல்லுந் திருமகள் போலப் பொருள் நீங்கிய காலை ஆடவரைப் பிரிந்து செல்லும் இயற்கை யுடையேம். இத்தகைய கணிகையர் குலத்திற் பிறந்த யாம் தவ வேடம் புனைவது மிகுந்த நகை விளைப்பதாகும். ஆதலின், யான் மாதவியின் மகளாகிய மணிமேகலையின் தவக் கோலத்தை மாற்றி, பல நாட்களாக அவளை விரும்பியிருக்கும் உதய குமரனிடஞ் சென்று அவன் மனத்தைக் கரைத்து, அவளை அவன் தேரில் ஏற்றிவரச் செய்வேன், இங்ஙனஞ் செய்யேனாயின் நடமிலப் வடுப்பட்ட மடந்தையர் போல நாடகக் கணிகைமார் வீட்டிற் புகாதொழிவேன்" என்று வஞ்சினங் கூறி, உதய குமரனுடைய அரண்மனையை நோக்கிச் சென்றாள்.

அவள், உவவனத்தில் மணிமேகலையைக் கண்ட நாளில் சுதமதி உரைத்ததும், அன்றிரவு மணிமேகலாத் தெய்வந் துயிலெடுத்தே தனக்குரைத்ததும் ஆகிய நல்லுரைகளினால் மணிமேகலையிடங் கொண்ட வேட்கை தவிர்ந்து யாதொரு மனக் கவலையு மின்றி வாழும் உதய குமரனை யடைந்து, வணங்கித் துதித்து, மணிமேகலை உலக அறவியிற் புக்க செய்தியைக் குறிப்பிக்க, அவன் முன் நிகழ்ந்தவற்றைக் கூறி, அவள் வேண்டுகோளை மறுத்தான். பின்னர்ச் சித்திராபதி தன் சாமர்த்தியமான மொழிகளால் மாறுத அவன் மனத்தை மாற்றி, மணிமேகலையை அவன் மீண்டும் விரும்புமாறு செய்தாள். உதய குமரன் சித்திராபதியின் சொற்களால் மயங்கி, அவளை நோக்கி, 'நீ உரைத்தபடியே மணிமேகலையை என் தேரி லேற்றி வருவேன்,' எனச் சொல்லித் தேரேறி உலக அறவியிற்புக்கு, மணிமேகலையை அணுகி, 'நீ பிச்சைப் பாத்திரம் ஏந்திப் பிக்குணிக்கோலம் பூண்டதற்குக் காரணம் யாது?' என்று வினவினன். அப்பொழுது மணிமேகலை அவன் முற்பிறப்பில் தன் கணவனாக இருந்தானென்ற முறையால்,

அவனை வணங்கி, *நாம் எடுத்த இவ்வுடல் நீரில எழுதிய எழுத்தைப் போலத் தோன்றி மறையும் இயல்பினை யுடையது; அன்றியும், நோயிற்பட்டு வருந்துந் தன்மையும் உடையது; பலவகைத் துன்பங்கட்கும் இடமா யுள்ளது. ஆகலின், இவ்வுடல் இறந்துபடுதற்கு முன அறஞ் செயவதே நன்மை பயக்கும் எனக் கருதி இவவேடங் கொண்டேன்,* என றுரைத்து, மாறு வேடங் கொள்ள நினைததது, அவவிடத்தை நீங்கிச சம்பாபதியின் கோயிலுட் சென்று, மணிமேகலா தெய்வம் முன்பு மணிபல்லவததில உபதேசித்த மந்திர வன்மையால காயசண்டிகையின வடிவ மெடுதது முன்போல வெளியே வந்து நின்றாள்

உதய குமரன் இவவுண்மையை உணராமல, மணிமேகலை காயசண்டிகையின கையிற பாததிரததைக கொடுதது மறைந்தா ளென்று எண்ணிச சம்பாபதியை வணங்கி, 'சம்பாபதியே, தன் கையில உளள பாததிரததைக காயசண்டிகையின் கையிற் கொடுதது மறைந்த மணிமேகலையை நீ எனககுக் காட்டுக; காட்டா யாயின், எத்தனை நாளாயினும் உன சந்நிதியை விட்டு நீங்காமல் வரங் கிடபபேன், அவளைக கொண்டன்றி அகல்வே னல்லேன், உன் திருவடியைத் தொழுகின்றேன், இதுவே நான் வேண்டுவது,' என்று வஞ்சினம் புகன்றான்.

---

## 20. சிறைக் கோட்டத்தை அறக் கோட்டமாக்கிய காதை

உதய குமரன் சம்பாபதியை வணங்கி, அவள் திருவடியைத தொட்டு வஞ்சின முரைதது நின்ற காலை, அங்கு ஒரு பாவையை அதிட்டித்து நிற்குந் தெய்வம் அவனை நோக்கி,

'எடவிழ் தாரோய், எஙகோ மகள்முன்
நாடாது துணிந்து நாநல் கூறாதனே!'

என்றுரைக்க, உதய குமரன் உள்ளங் கலங்கி, 'மணி மேகலையை நீ மறபபாய்,' என முன் தெய்வம் உரைத்ததை யும், இன்று பாவை சொனனதையும் மனததிற்கொண்டு, 'இவறறை எலலாம் மணிமேகலையின செய்தியை யறிந்த பின் னரே யறிவேன' என்றுரைதது, வேட்கை வயததனாய்த தன் இருபபிடம் புகுந்தான.

இப்பால, மணிமேகலை உதய குமரன கருத்தை அறிந்து 'நாம் இனி வேற்றுருக்கொண்டு இந்நகரில் வசிப் பதே தகுதி யுடைத்து. இன்றேல, எப்படியும் அவன் நம் மைக் கைபபற்ற முயலவான்,' என்று துணிந்து, காயசண்டி கையின் உருவததுடன அமுத சுரபியைக் கையிலேந்திப் பலவிடங்களிலுஞ் சென்று, இரவலாக்கு அன்ன மிட்டு வந் தாள்.

இவ்வாறிருக்கு நாளில் ஒரு நாள், சிறைக்கோட்டததை யடைந்து, அங்குத் தண்டனையடைந்து பட்டினியால் வருந் தும் பலரையும் உண்பித்துப் பசியாற்றினாள். சிறைக்காவலர் அவளுடைய தானததையும், அவள் ஒரு பாததிரத்தி லிருந்து அன்ன மெடுத்துப் பலருடைய பசியை ஆற்றி யதையும் பார்த்து வியந்து, மன்னவனை யடைந்து,

'வாழியெஞ் சென்னி மனனவ வாழி
காவிரி புரகரும் நாடுகிழ வோனே
வளாபிறை யெனவே மிளிாகரின் செஙகோல்.'

என்று அவனை வாழ்த்தி, 'யானைததீ யென்னும் பெரும்பசி நோயால் வருந்தித் திரிந்துகொண்டிருக்கும் ஒருததி, சிறைக் கோட்டமடைந்து, ஒரு பாத்திரத்திலிருந்தே அன்னமெடுத் துப் பலரை உண்பிக்கின்றாள். இவ்வியப்பைத் தெரிவிக்க வந்

தோம்,' என்று சொன்னார்கள். அரசன, 'அமமங்கையை இங்கே அழைதது வருக,' என்றனன். காவலாளா அங் ஙனமே சென்று அழைகக, வேற்றுருவந் தாங்கிய மணி மேகலை அரசன வாயிலை யடைந்து, 'மனனவ, நின் அருள் வாழ்க,' என்றாள். எனலும, அரசன், 'தாங்குதற்கரிய தவ வேடம் பூண்ட மாதே, நீ யாா? இப்பாததிரம் யாண்டுப் பெற்றாய்?' என வினவினன அவள், 'வேந்தனே, நீ நெடுங் காலம் வாழ்க, வானம் பெயக, மண் வளம பெருகுக. உனக்கு எல்லா நலனும் இனிதின் ஓங்குக. யான் ஒரு விஞ்சை மகள். இப்பாததிரம் அம்பலததிலுளள ஒரு தெய் வம் அருளியது, யானைதீ என்னும் நோயைத் தீர்ததது; உயிர்கட்கு உயிா தரும் மருந்தாக உள்ளது,' என உரைத் தாள். அது கேட்ட வேந்தன, 'யான செயததக்கது யாது?' என மீண்டுங் கேடக, 'அரசே, இசசிறைக் கோடடததை அருந்தவர் வாழும் அறக்கோட்ட மாக்குக,' என, அரசனும் அவ்வாறே செய்தான்.

## 21. உதய குமரனைக் காஞ்சனன் வாளா லெறிந்த காதை

மணிமேகலை விரும்பியபடியே சிறைக் கோட்டம், பல வகை யான புண்ணியங்களும் நடைபெறுதறகுரிய தூய்மை யான அறக்கோட்டமாக விளங்கியது, இவற்றை எல்லாம் அறிந்த உதய குமரன், 'உலக வறவியை நீங்கி வெளியில் வருங்காலத்தில மணிமேகலையைக் கைப்பறறிக் கொண்டு வந்து, அவள் கற்ற விஞ்சைகளையும், அவள் கூறும் இன் மொழிகளையுங் கேட்டு மகிழ்வேன்,' எனத் தனக்குள் முடிவு செய்துகொண்டு, உலக அறவிக்குச் சென்றான். இது நிற்க.

காயசண்டிகை, மணிமேகலையிடம் விடை பெற்று, ஆகாய வழியாக வித்தியாதர வுலகத்திற்குச் சென்றபோது, துர்க்கை வசிக்கும் விந்த மலைக்கு நேராகச் சென்றாள் ; அப்போது அம்மலையைக் காக்கும் விந்தா கடிகை என்பவள் அவளைச் சாயையினால் இழுத்து விழுங்கிவிட்டாள். ஆகாய வழியே செல்பவர்கள் விந்த மலைக்கு நேராகப் போவதில்லை. போனால், உயிரை இழப்பார்கள். காயசண்டிகை இதை யறியாதவளாகலின், இத்துன்பத்துக்கு ஆளாயினாள். இதனை அறியாத அவள் கணவனாகிய காஞ்சனன் என்னும் வித்தியாதரன், 'முனிவர் மொழிந்த சாபப்படி பன்னிரண்டு வருடங் கழிந்தும் நமது மனைவி இன்னும் வரவில்லையே!' என்று அவளைத் தேடிவந்து, காவிரிப்பூம் பட்டினத்தை யடைந்து, பூதசதுக்கமும், புது மலர்ச் சோலையும், மாதவரிடங்களும், மன்றமுமாகிய பல விடங்களிலுந் தேடித் திரிந்து, எங்குங் காணாது, உலக அறவியை யடைந்து, பல மாந்தர்களின் பசிப்பிணியைப் போக்கும் காயசண்டிகையின் உருவங் கொண்ட மணிமேகலையைக் காயசண்டிகை யென்றே கருதி, அவளை நெருங்கி, 'இப்பாத்திரம் உனக்கு எங்கிருந்து கிடைத்தது ? உன் பசிப்பிணியைப் போக்குமாறு கிடைத்த தெய்வத் திருவருளோ?' என்று வினவிப் பின் சில அன்பு மொழிகளையும் பேசினான். அவள் அம்மொழிகளைச் சிறிதும் மதியாது, அவனை நீங்கி உதய குமரனை அணுகி, அங்குள்ள நரைத்த முதியவள் ஒருத்தியைக் காட்டி, உடம்பின் இழிவுகளை எல்லாம் அவனுக்கு விளங்க வுரைத்தாள். இதனைக் கண்ட காஞ்சனன், 'இவள் என் மொழியைச் சற்றும் விரும்புகின்றிலள் ; வேறொருவனை யடைந்து அவனுக்கு அறிவினைப் புகட்டுவாள் போல அன்புரைகளைக் கூறுகின்றனள். அவனிடங் கொண்ட காதல் பற்றியே என்னை மறந்தனள் போலும்!' என்றெண்ணித் தீமை செய்யும் நோக்கத்துடன் புற்றி லடங்கிய பாம்பு

போல யாவரு மறியாதபடி உலக வறவியின் ஒரு புறம் பதுங்கி யிருந்தான்.

காஞ்சனன் மறைந்திருப்பதை அறியாத உதயகுமரன், 'மணிமேகலையே காயசண்டிகையி னுருவந்தாங்கி நம்மை மயக்கினாள், முன்பு அறிந்தவனைப போனறு பழமை பாராட்டிப் பேசும் ஒருவன் இங்கிருக்கின்றமையால, இவ்விடம் விட்டு அகல்வா ளலலள். இவள் செயகையை இனறு இரவு நடு யாமததில வந்து அறிவோம்,' என்று நினைததுத் தன் இருப்பிட மடைந்து, இரவு வருங்காலததை எதிர்பார்த்திருந் தான். மணிமேகலையும் காயசண்டிகையின் உருவததோடு சம்பாபதிக் கோயிலில தங்கி யிருந்தாள.

உதய குமரன் அன்றிரவு ஊரடங்கியபின், மணிமேகலை யிடங் கொண்ட காதலே துணையாகக கொண்டு, தன் கோயிலை நீங்கி, உலக அறவியை யடைந்து, பாம்பு வசிக்கும் புற்றினுள் நுழைந்து செலபவனைப போல அதனுட் புக் கான்.

அவன் புகுந்த அளவிலே, முன்னமே அங்குப் பதுங்கி யிருந்த காஞ்சனன், 'இவன் காயசண்டிகையை விரும்பியே வந்தான்,' எனக் கடுங்கோபங் கொண்டு, அவன்பின் விரைந்து சென்று, அவனைத் தன் கை வாளால வெட்டி வீழ்த்திக் காயசண்டிகையை அழைத்துக்கொண்டு ஆகாய வழியே செல்லக் கருதிக் காயசண்டிகையின் உருவங்கொண்ட மணி மேகலையிடம் விரைந்து சென்றான்.

அப்பொழுது அங்குள்ள கந்திற்பாவை, 'காஞ்சன, நீ அவளிடஞ் செலலாதே! அவள் உன் மனைவியல்லள்; மணி மேகலை கொண்ட வேற்றுருவமே அவ்வடிவமாகும். உன் மனைவி உன்னிடம் வரப் புறப்பட்டு ஆகாயவழியாக வரும் போது, விந்தாகடிகையால் விழுங்கப்பட்டாள். நீ அதனை யறியாமல் இத்தீமை செய்தாய். உதய குமரன் தன் ஊழ்

வினையால இறந்தானாயினும், நீ சிறிதும் ஆலோசனை யின்றிக் கொலை செய்தமையால, அததீவினை உன்னை விடாது வருத் தும்,' என்றுரைக்கக் கேட்டு, விசனததுடன காஞ்சனன் தன்னகரம் புக்கான்.

## 22. கந்திற் பாவை வருவ துரைத்த காதை

சம்பாபதியின கோயிலில இருந்த மணிமேகலை, கந்திற் பாவை உரைத்த அற்புத மொழிகளைக கேட்டு, உதய குமரன் காஞ்சனனாற கொலையுண்டதைை யறிந்து, மிக விசன முற்றுத் தான் கொண்ட வேறறு வடிவத்தை நீககி, முன் னுருவங் கொண்டு வெளியே வந்து, 'காதல, நீ முற்பிறப் பில திட்டிவிடம் என்னும் பாம்பினால் உயிர் நீங்கிய காலத் தில, யானும உன் பிரிவை ஆறறாதவளாகி அக்கினியிற் புகுந்து உயிா துறந்தேன்! இபபிறபபிலும் உவ வனததில் உன்னைக் கண்டபோதே என் மனம் உன்னை நாடியது! அப்பொழுது என் பெயா கொண்ட தெய்வம் என்னை மயக்கி எடுததுச சென்று மணிபலலவததிற் சோத்தது. நான் அங்குள்ள புதத பீடததைத் தரிசிதது, என பழம்பிறப் பையும், அப்பிறப்பில நீ கணவனா யிருந்ததையும் அறிந் தேன். அதனால், உன்னை நலவழியிற் செலுததக் கருதி, பிறந்தவர் சாதலும், செத்தோர் பிறததலும், அறத்தால் விளையும் மேன்மையும், பாவத்தால விளையுந் தீமையும் ஆகிய இவற்றை உனக்கு உணர்த்தி, உன்னை நல்வழியிற் செலுத்தி உன் தீவினையை ஒழிப்பதற்காகவே காயசண்டிகையின் உரு வத்தை எடுத்தேன்; என்னுடைய எண்ணத்திற்கு மாறாக உன் தீவினை வலியால், காஞ்சனன் கை வாளால் வெட்டப் பட்டு நீ உயிர் துறந்தாய்,' என்று பல பல சொல்லிப் புலம் பிக்கொண்டே உதய குமாரனை அணுகினாள்.

அப்பொழுது கந்திற்பாவை அவளை நோக்கி, 'பிறவித் துன்பத்தை அறவே ஒழிக்க முயலும் மணிமேகலையே, நீ அவனிடஞ் செல்லற்க! செல்லற்க!! உனக்கு அவன் கணவனானதும், அவனுக்கு நீ மனைவியானதும் முற்பிறப்பு ஒன்றில மாத்திரம் அல்ல, அதற்கு முன் பல பிறவிகளிலும் நீங்கள் அவ்விதமாகவே யிருந்தீர்கள். ஆதலின், அவனைப் பற்றி நீ வருந்துதல் ஒழிக,' எனறுரைத்தது.

மணிமேகலை அம்மொழியைக் கேட்டுக் கந்திற்பாவையை அணுகி, 'இவ்வம்பலத்தில யாவருக்கும உண்மையை உரைக்குந் தெய்வம் ஒன்று உண்டெனக் கேட்டிருக்கின்றேன், அத்தெய்வம் நீதான்போலும்! ஆயின், உன் அடியை வணங்குகின்றேன். உதய குமரன் பழம்பிறப்பில திட்டிவிடம் என்னும் பாம்பாலும், இப்பிறப்பிற் காஞ்சனன் கைவாளாலு மிறந்ததற்குக் காரண மின்னதென்று எனக்கு அறிவிக்க வேண்டும்,' என வேண்டினள்.

அப்பொழுது கந்திற்பாவை, 'மணிமேகலையே, கேட்பாயாக: முற்பிறப்பில் நீயும், உன் கணவனாகிய இராகுலனும் காயங்கரை என்னும் ஆற்றங்கரையை அடைந்து, அவ்விடத்திற் பலருக்குந் தரும நெறியைப் போதித்துக்கொண்டிருந்த பிரமதரும முனிவரைக் கண்டு வணங்கி, அவரை உண்பிக்க வேண்டுமெனுங் கருத்தால் அவரிடம் அநுமதி பெற்றுக்கொண்டு, சமையற்காரனை நோக்கி, 'அதி காலையில சமையல் முதலியன சித்தப்படுத்தற்கு விரைவின வருக,' என்று கட்டளை யிட்டும், எக்காரணத்தாலோ அவன் சற்றுக் காலந் தாழ்த்து வந்தான்.

'வந்தவன் தனக்கு நேர்ந்த பிழையைக் கருதி உள்ளந் தடுமாறிக்கொண்டே மடைப்பள்ளியிற் புகுந்தான். புகுந்த அவன் நிலைமையை யறியாமலே, சிறிதுங் கண்ணோட்ட மின்றி இராகுலன் அவனைக் கை வாளால் வெட்டி வீழ்த்தினன்.

அவ்வினைப்பயனே உதய குமரனை இரண்டு பிறப்பிலும் இவ்வாறு இறக்கச் செய்தது. அவரவர்கள் செய்த வினையானது செய்தவர்கட்குத் தன் பலனை அளித்தே தீரும்,' என்று சொல்லி, மீண்டும் சொல்லத் தொடங்கியது:

'உதய குமரன் இறந்த செய்தியைச் சக்கரவாளக் கோட்டத்துள்ள முனிவர்களால் அரசன் அறிந்து, உன்னைச் சிறைக்கூடஞ் சேர்ப்பான். அரசன் மனைவி உனக்குப் பல தீங்கு செய்யக் கருதி, வஞ்சனையாக உன்னை மீட்டுத் தன் காவலில் வைத்துக்கொள்வாள். அப்பொழுதே மாதவியின் வேண்டுகோளால் அறவண அடிகள் அங்கே வருவார். அவருடைய நல்லுரைகளால் நீ அக்காவலின் நீங்கிச் சாவக நாடு சென்று, ஆபுத்திரனோடு மணிபல்லவத்தை அடைவாய். அக்காலத்து ஆபுத்திரன் புத்த பீடிகையைக் கண்டு, அதனால் தன் பழம்பிறப்பின் நிகழ்ச்சிகளை யறிந்து மீண்டுந் தன் நாட்டை யடைவான். பின், நீ ஒரு முனிவன் வேடம் பூண்டு, வஞ்சி நகரத்தை யடைந்து பல சமய உண்மைகளையுங் கேட்டறிவாய். இது நிற்க என் வரலாற்றையும் உரைப்பேன், கேட்பாயாக. நான் தெய்வ கணங்களில் ஒருவன், துவதிகன் என்னும் பெயருடையேன். இப்பாவை என் உருவத்தைப் போலவே மயன் என்னுந் தெய்வத் தச்சனாற் செய்யப்பட்டமையால், இதனை விட்டு நீங்காது என்றும் இங்கு வசித்துக்கொண்டிருக்கிறேன்,' என்றுரைத்தது.

மணிமேகலை மீண்டும் அத்தெய்வத்தை நோக்கி, 'இனி என் மரணம் வரையில் நிகழும் எல்லாச் செய்திகளையும் எனக்கு உரைத்தருள வேண்டும்,' எனக் கேட்டாள்.

கந்திற்பாவை, 'மணிமேகலையே, கேட்பாயாக: நீ வஞ்சி நகரத்தில் இருக்கும்பொழுது, காஞ்சி நகரத்தில் உயிர்கள் பசியால் வாடுவதையும், அறவணவடிகளும் மாதவியும் உன் வரவை எதிர்பார்த்துக்கொண்டு அந்நகரிற் காத்திருப்பதை

யும் அறிந்து, உடனே புறப்பட்டுக் காஞ்சி நகரத்தை யடைந்து, பசியால வாடும் எல்லா வுயிர்கட்கும் உணவளித்துக் காப் பாற்றுவாய். அப்பொழுது அந்நகரததில உன்னுற் பல புது மைகள் நிகழும். பின்பு வஞ்சி நகரததில நீ கேட்ட சமய உண்மைகளை எல்லாம் அறவண வடிகளிடம் உரைப்பாய். அப்பொழுது அவர், 'யான புத்ததேவா அவதரிக்கும் காலம் வரும் வரையில் இந்தப் பூமியிலேயே இறந்தும் பிறந்தும், மக்களுக்குத் தருமோபதேசஞ் செய்துகொண்டிருபபேன்,' என்று சொலலி, உனக்கும் நன்னெறிகளை உபதேசஞ் செய் வாா. அவர் மொழிப்படியே நீயும் அறவழியில ஒழுகி, இனி வரும் பிறப்புககளை உததர மகத நாட்டிலேயே யடைவாய். அப்பிறப்பெல்லாம் ஆண் பிறபபாகவே நிகழும. அப்பிறப்பு களிலெல்லாம் நீ அருளறங்களில் வழுவாதிருந்து, முடிவில் புத்த தேவருக்கு முதல மாணவனுகும் பேறு பெற்று, அப பால் பற்று நீங்கி நிாவாணம் அடைவாய். நீ முற்பிறபபில் சாது சக்கர முனிவரை உண்பித்த புண்ணிய விசேடததி ஞலதான் உவ வனததில மணிமேகலா தெயவம் வந்து. உன்னை மணிபலலவத்திற் சோததது,' என்றுரைத்தது.

மணிமேகலை கந்திற் பாவை யுரைத்த மொழிகளைக் கேட்டு மனமயக்கந் தீர்ந்து கவலையினறி இருந்தாள். பின்பு பொழுது புலரக் கதிரவன் உதிததான்.

## 23. சிறை செய் காதை

சூரியன் உதித்த காலையில, சம்பாபதித் தெய்வத்தையுங் கந்திற்பாவையையும் வழிபடுதற்கு அவவிடம் வந்தவர் களிற் சிலர் உதய குமரன் வெட்டுண்டு கிடப்பதை யறிந்து, சக்கரவாளக் கோட்டத்திலுள்ள முனிவர்களுக்கு அதனை உரைத்தார்கள். முனிவர்கள் மணிமேகலையைப் பார்த்து,

இவ்வரச குமாரன் வெட்டுண்டது எதனால்? நீ யறிவை யாயிற் கூறுக,' எனக் கேட்க, மணிமேகலை அவ்விடத்தில் நடந்தவை யனைத்தையும் விளக்கமாக உரைத்தாள். பின்பு முனிவர்கள், வெட்டப்பட்ட உதய குமாரனுடைய உடம் பையும், மணிமேகலையையும் ஓரிடத்தில் மறைத்து வைத்து விட்டு, அரச மாளிகையைச் சார்ந்து, வாயில் காப்போரால் தங்கள் வரவை அறிவித்து, அரசனைச் சார்ந்து, அவனுக் குப் பல ஆசி மொழிகள் புகன்றார்கள். மன்னவனும் முனி வர்களை மரியாதையாக வரவேற்று, ஆசனத்தில் அமரச் செய்தான். அம்முனிவர்களில் ஒருவர் அரசனை நோக்கி, 'அரசனே, இந்நகரத்தில் இந்நாளில் மட்டுமே அன்று; அந் நாளினும் அலவழிப்பட்ட வேட்கையால் அறிவு கலங்கிப் பத்தினிப் பெண்டிரையும் தவ மாதரையும் விரும்பி மாண் டார் பலருளர். அவர்களுட் சிலரைப்பற்றி உரைப்பேன்; கேட்பாயாக:

'இந்நகரத்தை அந்நாளிற் காந்தன் என்னும் அரசன் ஆட்சி புரிந்து வந்தான். அக்காலத்தில் எல்லா அரசர்க ளுடைய பரம்பரையையும் வேரோடு களைந்து வந்த பரசு ராமன் இக்காந்தனிடமும் போர்செய்தற்கு வந்தான். அதனை யறிந்து தூக்கா தேவி மன்னவனிடம், 'நீ இப்பொழுது பரசுராமனோடு எதிர்த்துப் போர் செய்வது தகுதியன்று; ஆதலின், வேறிடஞ் சென்று மறைந்து வாழ்வாயாக,' என் றுரைக்க, அவ்வாறே செல்ல நினைத்த அக்காந்தன், காதற் கணிகையின் மகனும் சிறந்த வீரனுமாகிய ககந்தனை அழைத்து, 'நீ அரசுரிமை பூணுங்குலத்திற் பிறவாதவனாத லால், பரசுராமன் உன்னை எதிர்த்துப் போர் செய்ய மாட் டான். நீ சிறிதும் அச்சமின்றி, நான் வரும் வரையில் இந் நகர ஆட்சியைக் கைக்கொள்க. உன்னால் ஆளப்படுதலின், இந்நகரம் காகந்தி என்னும் பெயர் பெறுவதாக. நான் சில

காலம் மறைந்துறைந்து, பின்னர் அகத்திய முனிவர் அருள் பெற்று மீள்வேன,' என்று சொல்லி, அவனிடம் அரசுரிமை யைக் கொடுத்துச் சென்றான

'அக்ககந்தன் ஆட்சி புரியுங் காலத்தில் ஒரு நாள் அவ னுடைய இளைய மகன, காவிரியில் நீராடித் துணையின்றித் தனியாக வீடு நோக்கி வந்துகொண்டிருந்த மருதி எனனும் பார்ப்பனியைக் கண்டு, அவள்பாற் காதல் வளர மயங்கி, அவளைத் தன்னிடம் வரும்படி அழைத்தான் அகக்கொடு மொழியைக் கேட்ட மருதி நெஞ்சந் திடுக்கிட்டு, 'இப்புவி யில மழை பெய்விக்கும் ஆற்றலுடைய பத்தினிப் பெண் டிர்கள் பிறர் நெஞ்சிற் புகமாட்டார்களே! அவ்வாறிருக்க, நான் இத்தீயோன் உளத்தில எளிதாகப் புகுந்தேனே! இத னால், அந்தணர் வளர்க்கும் முத்தீயைப் பேணும் உரிமை இழந்தேன்! இதன காரணத்தையும் இன்னதென றறியே னே! என் செய்வேன்!' எனக் கவலையடைந்து, தன் வீடு நோக்கிச் செல்லாது, பூதச்துக்கத்தை யடைந்து, அங்குள்ள தெய்வத்தை வணங்கி, 'நான் என் கணவருக்கு ஒரு குற்ற முஞ் செய்தறியேன். அப்படியிருந்தும், இன்று அயலான் ஒருவன் என்னை விரும்பினன். யான் செய்த தவறும் இன்ன தென்றறிகிலேன் நீ இவ்விடத்தில இருக்கின்றாயோ!' என்று அரற்றினள்.

'அவளுடைய குறையைக் கேட்ட பூதம் அவள் முன் வந்து,

> 'தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
> பெய்யெனப் பெய்யும் பெருமழை யென்றவப்
> பொய்யில் புலவன் பொருளுரை தேறாய்
> பிசியும் நொடியும் பிறர்வாய்க் கேட்டு
> விசிபிணி முழவின் விழாக்கோள் விரும்பிக்
> கடவுட் பேணல் கடவியை யாகலின்

மடவார் லேவு மழையும் பெய்யாது
நிறையுடைப் பெண்டிா தமமே போலப்
பிறாநெஞ்சு சுடூஉம பெற்றியு மிலலை
ஆஙகவை யொழிகுவை யாயின ஆயிழை
ஓஙகிரு வானதது மழையுநின் மொழியது
பெட்டாங கொழுகும பெண்டிரைப் போலக
கட்டா துன்னையென் கடுநதொழிற பாசம.'

எனக் கூறிய பின்னரும், 'குற்றஞ் செயதோரை ஏழு நாளில் தண்டிப்பது அரசனது முறையாகும, அவவேழு நாளைக் குள் அவன் தண்டியா தொழிவனாயின, பிறகு தண் டித்தல எனக்கு முறையாகும். ஆதலின, இதனை ஏழு நாளைக்குள்ளேயே அரசன அறிந்து இதநிவினையாளனைக் கொல்வான்,' என்று உரைததது. அப்படியே ககந்தன் தன் மகன செய்த தீமையை உணாந்து அவனைக கொனறுன

'மன்னவா மன்ன, மறறு மொன்று கேடபாயாக : இந் நகரததில் வணிகர் குலததிற பிறந்த தரும தத்தன் என்பவ னும், அவன் மாமன் மகளாகிய விசாகை எனபவளும் ஒரு வர்க்கொருவா மிக்க அன்புடையவாகளாய் வாழ்ந்து வந் தார்கள். ஊரிலுளளவாகள அதனைப பாாதது, 'இவர்கள கந்தருவ மணஞ் செயதுகொண்டாாகள!' எனறு அவ்விரு வா மேலும் பழி சுமததினர்கள். விசாகை அதனைப் பொறுத வளாய், உலக வறவியிற சென்று, கந்திறபாவையை வணங்கி, 'எனக்கு நேர்ந்த இப்பழியை நீ போககுவாயாக,' என வேண்டி நின்றாள். அப்பொழுது கந்திற பாவை யாவருக் கும் கேட்கும்படி, 'விசாகை யாதொரு குற்றமும் இல்லாத வள்,' என்று சொல்லிற்று. அதைக் கேட்ட யாவரும அவ ளைப் புகழ்ந்தார்கள் ; விசாகையும் மனங் குளிாந்து, வீட்டை யடைந்தாள். பின்பு விசாகை, 'இத்தெய்வம் உரைக்கா விடின், ஊரார் என்னிடங் கொண்ட ஐயம் நீங்க மாட்டார்

கள். இப்பிறப்பில் யான மணஞ் செய்துகொள்ள மாட்டேன்; தவஞ் செய்து மறு பிறப்பில் இவனையே கணவனாகப் பெறுவேன்,' என்று தன் அன்னையிடம் மொழிந்து, கன்னி மாடம் புக்குத் தவஞ் செய்துகொண்டிருந்தாள்.

'தரும தத்தனுந் தனக்குண்டான பழியைப் போக்கிய கந்திற்பாவையை வணங்கி, வேறு மகளிரை மணஞ் செய்து கொள்ள விருப்பமில்லாதவனாகிக் காவிரிப்பூம்பட்டினத்தை நீங்கி, மதுரைமா நகரஞ் சென்று, வியாபாரத்தாற் பெரும் பொருளீட்டி, அரசனால் நன்கு மதிக்கப் பெற்று, வெகு சிறப்பாக வாழ்ந்து வந்தான்.

'அப்பொழுது ஓர் அந்தணன் அவனிடஞ் சென்று, "நீ மணஞ் செய்துகொள்ளாமல் இந்நாள்வரையில் இந்நகரிலிருந்து என்ன காரியஞ் செய்கின்றாய்? மனைவியில்லாமற் செய்யும் எந்தத் தருமங்களும் பயனில்லாதன வென்று பெரியோர் கூறுகின்றார்களே! நீ இதனை அறிந்திலையோ? இனியேனுந் தாமதியாது உன்னகரத்திற்குச் செல்க,' எனக் கூறினான். தரும தத்தனும் அம்மதுரையை நீங்கி இந்நகரமடைந்தான்.

'தரும தத்தன் வந்த செய்தியைக் கேட்ட விசாகை கன்னி மாடத்திலிருந்து வெளிப் போந்து, தரும தத்தனிடஞ் சென்று, 'இப்பொழுது நம்மில் ஒருவரை ஒருவர் அறிந்திலோம்; முன்பு நம்மை மயக்கிய வனப்பெல்லாம் எங்கே ஒளித்தன? உனக்கும் வயது அறுபதாயிற்று; எனக்குந் தலை நரைத்து உடல் தளர்ந்தது; நமது இளமையும் வேட்கையும் இருந்த இடந் தெரியாமல் ஓடிப் போயின! இப்பிறப்பில் நான் உன்னைக் கணவனாக அடையேனாயினும், மறுமையிலேனும் உறுதியாக அடைவேன். இளமையும், செல்வமும், உடம்பும் அழியுந் தன்மையன; அறம் ஒன்றே சிறந்த துணையாக வுள்ளது. ஆதலின், நீ தேடிய பொருளைக் கொண்டு தருமஞ் செய்க,' என்றுரைத்தாள்.

'விசாகையின் மொழிப்படியே அவனும் பல தருமங்களைப் புரிந்து வாழ்ந்தான். இது நிற்க. விசாகை கந்திற்பாவையை அடைந்து, அப்பாவையின் மொழியால் தன்னுடைய பழி மொழியை நீக்கிக்கொண்டு, வீதியின் வழியே வரும்போது, முன்பு மருதி என்னும் பார்ப்பனியை விரும்பிக் கொலையுண்ட இராஜ குமாரனுக்கு முன் பிறந்தானொருவன், அவளுடைய அழகைப் பார்த்து மயங்கித் தான் அணிந்த மாலையைக் கழற்றி அவள் கழுத்திலிடத் துணிந்து தன் கையை உயர்த்தித் தலையிலணிந்த மாலையைக் கழற்றினன். விசாகையின் சிறந்த ஒழுக்கத்தால் அவன் தூக்கிய கை அப்படியே நின்றுவிட்டது. இதனை அறிந்த கந்தன் கடுஞ்சினங் கொண்டு, தன் மைந்தனென்றும் பாராமல் அவனைத் தன் வாளால் வீசிக் கொன்றான்,' என்று உரைத்தார்.

அரசன் அம்மொழிகளைக் கேட்டு, 'முனிவரே, 'இந்நாளில் மட்டு மன்று,' எனத் தொடங்கிப் பல விஷயங்களைப் போதித்தீர்கள் அங்ஙனமாயின், அத்தீய ஒழுக்கம் இந்நாளினும் உளதோ?' எனக் கேட்க, உதய குமரன் உவவனஞ் சென்றது முதல் காஞ்சனன் கை வாளால் வெட்டப்பட்ட வரையில் நிகழ்ந்தவற்றை முறையாக அம்முனிவர் உரைத்தார்.

அரசன் தன் மகன் இறந்தது பற்றிச் சிறிதுந் துன்பமில்லாதவனாய்த் தன் மந்திரியாகிய சோழிக ஏனாதியை யழைத்து, 'நெறி தவறிய உதய குமரனுக்கு நான் செய்ய வேண்டிய தண்டனையைக் காஞ்சனன் செய்து முடித்தான்; அதனால், அவன் தகுதியில்லாதவனானன். அரசன் காவல் இன்றெனில், மாதவர் நோன்பும், மடவார் கற்பும் இல்லையாகும். ஒரு பசுவின் துயரைப் போக்கத் தன் மகனைத் தேர்ச் சக்கரத்திலிட்டுத் தேரை நடத்திய அரசன் வழியில், ஒரு தீவினையாளன் தோன்றினான் என்பதை மற்றைய அரசர்

கள் அறிவதன் முன்னமே, அவனுடலைச் சுடுகா டடைவித்துக் கணிகை மகளாகிய மணிமேகலையையும் சிறைப் படுத்துக' என்று கட்டளையிட்டான். மந்திரியாகிய சோழிக ஏனுதியும் அவவாறே செய்து முடித்தான.

---

## 24. சிறை விடு காதை

உதயகுமரனுடைய மரணத்தைக் கேளவியுற்ற இராஜமாதேவி மிகவும் புலம்பினுள அப்பொழுது அரசனுடைய கட்டளையினபடி வாசந்தவை எனனும் முதியவள அவளுக்குப் பல நனமொழி கூறித தேறுதல செயதாள். செய்தும், அவள் அததுனபததை ஆறறுதவளாய், தன மகனுடைய மரணததுக்குக காரணமா யிருந்த மணிமேகலையைப பலவாறு துனபபபடுதத மனத்திறகொண்டு, அதனை மறைததுத தன் கணவனை யடைந்து, 'மன்னா மனனரே, தவக் கோலம் புனைந்து ஐயமேறகுந் தொழில பூண்ட மணிமேகலையைக் கணடு அறிவு மயங்கிய உதய குமரன் இறந்தது முறையே. தன இளமைப் பருவததைச சற்றும் பயன்படாமற் செய்து துறவறம் பூண்ட மணிமேகலையைச சிறைப படுததல் கூடாத செயகையாகும், ஆகலின், அவளை விடுவித்தருள்க,' என வேண்டினுள.

அரசனும் அவள் எண்ணத்திற்கிையைந்து, மணிமேகலையை விடுவிக்க, இராஜமா தேவி தன் தீய எண்ணததை நிறைவேற்றக் கருதி, அவளைத் தன்னுடன் அழைத்துச சென்று, அறிவை மயக்கும் மருந்தை அவளுக்குக் கொடுத்தாள். அவள் மறுபிறப் புணர்ந்தவளாகலின், அம்மருந்தினுல் ஒரு வித மயக்கமு மின்றி யிருந்தாள். பின், இராஜமா தேவி, ஓர் இளைஞனை அழைத்து, அவனுக்கு நிறையப் பொன் கொடுத்து, 'நீ எவ்வாறேனும் மணிமேகலையின் தவவேடத்தை

மாற்றி, அவள் உன்னை விரும்பினதாக ஒரு பழியை அவள் மீது சுமத்தி, அனைவருக்கும் அதனைத் தெரிவிப்பாய்,' எனக் கட்டளையிட்டாள்.

அக்கொடியவனும் பொருளாசையால் மனந் திரிந்து, மணிமேகலை இருந்த அந்தப்புரத்தை யடைந்தான். அவனு டைய வரவைக் கண்ட மணிமேகலை, 'இஃது இராஜமா தேவியின் வஞ்சகச் செயலே!' எனத் துணிந்து, தனது ருவை மறைத்து, ஆணுருவங் கொண்டு நின்றாள். அக்கொடி யோன் மணிமேகலையைக் காணாது, ஓர் ஆடவன் நிற்கக் கண்டு, 'இதில் ஏதோ சூதிருக்கின்றது!' என்று அஞ்சி, ஓடிப்போய் விட்டான்.

இராஜமா தேவி, தான் செய்த இரண்டு சூழ்ச்சிகளும் பலிக்காதது கண்டு, கடுஞ்சினங் கொண்டு, அவளைக் கொல் வதே தக்கதெனக் கருதி, 'மணிமேகலைக்கு நோயினால் உணவு செல்லவில்லை,' என்று ஒரு பொய்ம் மொழியைப் பரப்பி, காற்றும் நுழையாத ஓர் இருட்டறையில் அவளை அடைப் பித்தாள். அவள் ஊணொழி மந்திரம் உணர்ந்தவளாகலின், சிறிதும் வாட்டமின்றி யிருந்தாள்.

மணிமேகலையின் அற்புதச் செயல்களைக் கண்ட அரசன் தேவி, வியப்பும் அச்சமும் அடைந்து, அவளை வணங்கி, 'மகனிறந்த துன்பத்தைப் பொறுக்காமல் இத்தீமைகளைச் செய்தேன்; பொறுத்தருள வேண்டும்,' என வேண்டினாள். அப்பொழுது மணிமேகலை அவளை நோக்கி, 'உன் மகனாகிய உதய குமரன் முற்பிறப்பில் திட்டிவிடம் என்னும் பாம்பி னால் இறந்தபோது, அவனுக்கு மனைவியாயிருந்த நான், அத் துயர் பொறாது, அக்கினியில் விழுந்து மாண்டேன். அப் பொழுது நீ எங்கிருந்து புலம்பினாய்? இப்பிறப்பில் காஞ்ச னன் கை வாளால் உதய குமரன் வெட்டப்பட்டதும் முன் செய்த தீவினைப் பயனே. 'நீ இதனை எவ்வாறு அறிந்தனை?'

எனிற் கூறுவேன்' என்று தான அறிந்தவை யனைத்தினையுங் கூறிப் பின்பு, 'நீ எனக்குச செய்த வஞ்சகச செயல்கள் என்னை ஒரு விதத் துனபத்திற்கும் ஆளாககாதபடி, என மந் திர வலியால தடுததேன், ஆனால், இததுனபங்கட்கு உட் படாமலே ஆகாய வழியே செலலும் மந்திர வலியால நான் இவவிடததை விடடு நீங்கும் ஆற்றலும் உடையேன, ஆயி னும், முற்பிறப்பில என கணவனாயிருந்த உதய குமரனைப் பெறற தாயாக இருததலின, உனனை நல்ல வழியிற செலுத் தக் கருதியே இவவிடததில இருக்கினறேன இது நிற்க. இவவுலகததில வாழ்பவாகடகுத தீமை விளைப்பன கள்ளும், களவும், காதலும, பொய்யும், கொலையுமாகிய ஐந்துமே. இவற்றைத துறந்தோரே சீலமுடையவ ராவார்' எனறுரைத் துப் பினனும் பல நீதி மொழிகளையும் போதிததாள்.

இம்மொழிகளைக் கேட்ட இராஜமா தேவியின மனங் குளிர்ந்தது. அவள் தான செய்த பிழையை நினைததுப பெரிதும் வருந்தி, மீணடும் மணிமேகலையை வணங்க, மணி மேகலை, 'நீ யாது செய்தனை? என் கணவனைப பெற்ற தாயா கவும், அரசன் தேவியாகவும் இருந்தும், என்னைப் பணிதல் கூடுமோ?' என்று சொலலித தானும் அவளைப பணிந்தாள்.

## 25. ஆபுத்திர னுடைந்த காதை

மணிமேகலையின் நிலை இவ்வாறாக, சித்திராபதியானவள் உதய குமரன் காஞ்சனன் கைவாளால் வெட்டப்பட்ட தும், மணிமேகலை சிறைபபட்டது மாதியவற்றை அறிந்து, அவளை மீட்க நினைதது, அரண்மனையை யடைந்து, இராஜ மா தேவியை வணங்கி, 'மாபெருந்தேவி, கோவலன் மது ரையிற் கொலையுண்டது கேட்டு, மாதவி தவப் பள்ளியடைந் ததும், மணிமேகலை பிக்குணிக் கோலம் பூண்டு ஐயமேற்

பதும் என மனத்தைப் பெரிதும் புண்படுத்துகின்றன. இன்னும், இம்மணிமேகலையால் இந்நகரத்திற்குப் பெருந்துன்பமும் நிகழக் கூடும் என்று எனக்குத் தோன்றுகிறது. என்னையெனில், நம் மன்னராகிய நெடுமுடிக்கிள்ளி, முன் ஒரு நாள் கடற் கரையைச் சார்ந்த புன்னை மரச் சோலையை அடைந்தார். அவ்விடத்தில் நாகலோகத் தரசன் மகளாகிய பீலி வளை எனனும் அழகு நிறைந்த மங்கை யொருத்தியைக் கண்டு, அவளோடு ஒரு மாத காலம் மகிழ்ந்துறைந்தார். பின்பு அவள் மறைந்து தனது இருப்பிடஞ் சென்றாள். அரசர் அவளைக் காணாது பல விடங்களிலுந் தேடித் திரிந்து கொண்டிருக்கும்போது ஒரு சாரணனைக் கண்டு, 'நான் விரும்பிய மடந்தையை நீ கண்டதுண்டோ?' என வினவினார். அதற்கு அவன், 'நான் அவளைக் கண்டிலேன், ஆயினும், அவள் வரலாற்றை யறிவேன். அவள் நாக நாட்டரசனாகிய வளைவணன் புதல்வி, பீலி வளை யெனனும் பெயருடையாள். அவள் பிறந்த காலத்தில் ஒரு கணித நூற் புலவன், அவ்வரசனை யடைந்து, 'உன் மகள் சூரிய குலத்தரசன் ஒருவனை மணந்து ஒரு மைந்தனைப் பெறுவாள்,' எனக் கூறினன். இனி அவள் உன்னிடம் வாராள். எனினும், அவள் பெற்ற மகன் வருவான். நீ உன் கவலை யொழிக,' எனத் தேற்றி, மீண்டும் மன்னரை நோக்கி, 'நீ இந்திர விழாவை ஆண்டுதோறுந் தவறாது இயற்றுக. தவறின், உன் நகரங் கடலால் அழியும். மணிமேகலா தெய்வத்தின் உரை பழுதாகாது. இந்திர சாபமும் இருக்கின்றது,' எனக் கூறிப் போயினன்.

'அந்நாள் முதல் இந்நகர மாந்தர், 'எப்பொழுது நம் நாட்டைக் கடல் கொள்ளுமோ!' என அஞ்சுகின்றனர். 'தன் பெயர் கொண்ட பெண் மணி துன்ப முறுவாளாயின், அதனைப் போக்க மணிமேகலா தெய்வம் வருதலுங் கூடுமோ!'

என நாளும் அஞ்சுகிறேன். ஆகலின், மணிமேகலையை விடுவித்து, என் மனைக்குப் போக விடையளிப்பாய்' என வேண்டினாள்.

அம்மொழியைக் கேட்ட இராஜமா தேவி, சித்திராபதியை நோக்கி, 'அறிவுடையோரால் விலக்கப்பட்ட கள்ளும், பொய்யும், காதலும், கொலையும், உள்ளக்களவுமாகிய தீநெறிகளை நன்னெறியாகக் கொண்டு ஒழுகும் பரத்தையாகிய உன் வீட்டிற்குச் சிறந்த தவவொழுக்கம் பூண்ட மணிமேகலை வருதற்கு உரியவளல்லள், அவள் என்னிடமே இருத்தற்கு உரியவள்,' என மறுத்தாள்.

இவ்வாறு அவர்கள் பேசிக்கொண்டிருக்கும்பொழுது மாதவியும் சுதமதியும் அறவணவடிகளும் அங்கே வந்தார்கள். அறவணவடிகளைக் கண்ட இராஜமா தேவி, எழுந்து வணங்கி, எதிர் கொண்டு உபசரித்து, அவரை ஆசனத்தில் எழுந்தருளுவித்தாள். அப்பொழுது அறவணவடிகள்,

'தேவி கேளாய் செய்தவ யாக்கையின்
மேவினை யாயினும் வீழ்கதிர் போன்றேன்;
பிறந்தார் மூத்தார் பிணிநோ யுற்றார்
இறந்தா ரென்கை யியல்பே; இதுகேள்
பேதைமை செய்கை யுணர்வே யருவுரு
வாயி லூறே நுகர்வே வேட்கை
பற்றே பவமே தோற்றம் வினைப்பயன்
இற்றென வகுத்த இயல்பீ ராறும்
பிறந்தோ ரறியிற் பெரும்பே றறிகுவர்;
அறியா ராயின் ஆழ்நர கறிகுவர்.'

எனப் பன்னிரு நிதானங்களையும் விளங்க உபதேசித்து, 'எக்காலத்தும் நல்ல அறவழியையே மேற்கொண் டொழுகுக,' என்றுரைத்துப் பின் மணிமேகலையை நோக்கி, 'நீ பிற சமயக் கொள்கைகளை அறிந்தபின் உனக்கு இவ்

வறங்களை விளங்கக் கூறுவேன்,' என்றுரைத்துத் தம்மிடம்
போக எழுந்தார். அப்பொழுது மணிமேகலை அறவண
வடிகளை வணங்கி, பின் மாதவி முதலியோரைப் பார்த்து,
'நான் இந்நகரத்தி லிருப்பின், 'உதய குமரனுடைய மரணத்
திற்கு இவளே காரணமா யிருந்தாள்!' என்று பலரும் என்
னைப் பழிப்பார்கள். ஆதலின், நான் இங்கிரேன், இனி
ஆபுத்திர னாடடைந்து, அவனுடன் மணிபல்லவஞ் சேர்ந்து,
புத்த பீடத்தைக் கண்டு வணங்கி, பின் வஞ்சி நகரடைந்து,
பத்தினிக் கடவுளாகிய கண்ணகி தேவியைத் தரிசித்து, அப்
பால பல விடங்களுக்குஞ் சென்று, தருமஞ் செய்துகொண்டு
வாழ்வேன். எனக்கு இனி யாதொரு துன்பமும் உண்டா
காது. நீங்கள் அக்கவலையை யொழித்து, அறவணவடிகள்
மொழிப்படியே நடப்பீராக,' என்றுரைத்துப் போயினள்.

அப்பொழுது மாலைக் காலம் வந்தது. மணிமேகலை
உலகவறவியை யடைந்து, சம்பாபதித் தெய்வத்தையும்,
கந்திற் பாவையையும் வணங்கி, ஆகாய வழியே சென்று,
புண்ணியராசனுடைய நகரின் புறத்திலுள்ள ஒரு பூம்பொழிலை
யடைந்து, இளைப்பாறி யிருந்தாள்.

பின்பு அவள் அவ்விடத்திலுள்ள ஒரு முனிவரைக்
கண்டு, 'இந்நகரின் பெயர் யாது? இதனை ஆளும் அரசன்
யாவன்?' என வினவினள். முனிவர், 'இந்நகரின் பெயர்
நாக புரம் என்பது; இதனை ஆள்வோன் புண்ணிய ராசன்
என்பவன். இவன் பிறந்த நாள் முதல் இந்நாட்டில் காலந்
தவறாமல் மழை பெய்கின்றது, மரம் முதலியனவும் மிகுந்த
வளந் தருகின்றன, எல்லா வுயிர்களும் நோயின்றி வாழ்கின்
றன,' என்று அந்நாட்டின் பெருமையையும் அரசன் பெரு
மையையும் விளங்க உரைத்தார்.

## 26. ஆபுத்திரனோடு மணிபல்லவ மடைந்த காதை

அப்பொழுது புண்ணிய ராசன தன் மனைவியுடன அப் பொழிலையடைந்து, அங்குவாழுந் தருமசாவதா எனனும் முனிவரை வணங்கி, அறநூறபொருளைக கேட்டுககொண் டிருந்தான. மணிமேகலையும் பிச்சைப பாத்திர மேந்திய கையுடன் அவவிடத்தை யடைநதாள். அரசன மணிமேகலை யின தவக கோலத்தையும, அழகையுங் கணடு வியப்புறறு, 'இம்மங்கை யாவள?' எனககேட்டான். அபபொழுது அருகு நின்ற பிரதானி அரசனை நோக்கி, 'நான முன் சோழநாட்டுக் காவிரிப்பூம் பட்டினததிலுள்ள கிள்ளி வளவனது நட்பைப் பெறுதற்காக அஙககரஞ் சென்றபோது அறவணவடிகள மூலமாக இவள வரலாறறை யறிநதேன இந்நாவலந் தீவில் இம்மங்கைககு ஒப்பானவா எவருமிலா,' என்றுரைததான்.

அப்பொழுது மணிமேகலை புண்ணிய ராசனை நோக்கி, 'அரசே, முனபு உன கையிலிருநத பாததிரமே இனறு என் கையிலுள்ளது. நீ இன்று மறந்தாய் போலும! மணிபல்ல வத்தை யடைந்து, புதத பீடத்தைத தரிசிததாற பழம்பிறப் புணாசசியை அடைவாய; ஆகலின், ஆணடு வருக,' என்று கூறி, ஆகாய வழியே மணிபலலவஞ் சென்று சேர்ந்தாள்.

புண்ணிய ராசனும் அரண்மனையை யடைந்து, தனனை வளர்தத தாயாகிய அமர சுந்தரியைக் கண்டு, தன வரலா றனைத்தையும் அவள் உரைப்பக் கேட்டறிந்து, துறவு நிலை மேற்கொள்ள விரும்பித் தனது எண்ணத்தை மந்திரிக்கு வெளியிட்டான. அதைக் கேட்ட மந்திரியாகிய சன மித் திரன் அரசனை வணங்கி, 'இந்நாட்டு அரசர் உம்மைப் பெறுவதன் முன் பன்னிரண்டு ஆண்டு மழையின்றி இந் நாட்டில் வறுமை மிகுந்தது; உயிர்களெல்லாம் பசியால் வருந்தின. அக்காலத்தில் கோடையிற் கார் மேகந் தோன்

றியது போல நீர் தோன்றினீர். பின்பு மழை தவறாமற் பெய்து உலகஞ் செழித்தது, உயிர்கள் பசி யென்பதையே அறியாமல் வாழ்கின்றன; இன்று நீர் நீங்கின், எல்லாம் உம்மோடு நீங்கும்; தாயைப் பிரிந்த கன்று போல உயிர்கள் வருந்தும். இத்தகைய உலகக் காவலை யொழித்து,

> 'உயர்நிலை உலகம் வேட்டனை யாயின
> இறுதி உயிர்கள் எய்தவும் இறைவ,
> பெறுதி விரும்பினை யாகுவை' யன்றே
> தன்னுயிர்க் கிரங்கான பிறவுயிர் ஓம்பு
> மன்னுயிர் முதல்வ னறமுமீ தன்றால்"

என மொழிந்தான்.

அரசன் மந்திரியை நோக்கி, 'மணிபல்லவத்திற்குச் செல்லவேண்டு மென்னும் ஆசை என் உள்ளத்தை விட்டு அகன்றிலது, ஒரு மாத காலத்திற் சென்று மீள்வேன், அது வரையில் நீ இந்நகரை ஆள்வாய்,' என்றுரைத்து, அரசியலை அவனிடம் ஒப்புவித்துக் கடற்கரை சார்ந்து, மரக்கல மேறி, மணிபல்லவக் கரையில் இறங்கினான். புண்ணிய ராசனுடைய வரவை எதிர்பார்த்துக்கொண்டிருந்த மணிமேகலை அவனை எதிர்கொண்டு அழைத்துச் சென்று, புத்த பீடத்தை அவனுக்குக் காட்டினாள். அரசன் அப்பீடத்தைத் தரிசித்த வுடனே தன் பழம்பிறப்புணர்ச்சியை யடைந்து, தனக்கு அமுத சுரபியை யளித்த சிந்தாதேவியை நினைத்து வழிபட்டு, மணிமேகலையுடன் கோமுகிப் பொய்கையின் கரையிலுள்ள புன்னை மர நிழலில் அமர்ந்தான்.

மணிமேகலை ஆபுத்திரனுடன் வந்ததை யறிந்த தீவ திலகை அவ்விடம் வந்து, 'உயிர்களின் பசிப்பிணியை ஒழித்த உத்தம, அக்காலத்தில் மறந்து உன்னை இவ்விடம் விட்டுச் சென்ற கம்பளச் செட்டிகள் ஒன்பதின்மரும், மீண்டும் நினைத்

துக்கொண்டு, இவ்விடம் வந்து நீ இறந்தது கேட்டுத் தாங்க ளும் உயிர் துறந்தாாகள. அவாகளின் எலும்புகளை இதோ பாா அவாகளுடன வந்தவாகளும தங்களுயிரையுந் துறந் தாாகள அவாகள எலுமபையும் அங்கே காண்பாய்,' எனக காடடி, 'நீ இருககும் இப்புன்னை மரததடியில, உன் எலும்பு கள் மணலால மூடப்படடிருககினறன அவறறையுங் காண் பாய்,' எனறுரைததாள.

பினபு அவள் மணிமேகலையைப் பாாதது, 'காவிரிபபூம் பட்டினம கடலால் அழிவுறறது. அதன் காரணததைக் கூறுவேன , கேள்: நாக நாடடரசனுகிய வளை வணன மகள பீலி வளை எனபவள் தன மகனேடு இததீவை யடைந்து, காவிரிப்பூம் படடினஞ் சென்ற ஒரு கமபளச செடடியி னிடம் தன் மகனை ஒபபுவிதது, அவனைக கிளளிவளவனிடஞ் சோக்கும்படி கூறினள். அவனும மகிழ்சசியுடன அம்மைந் தனைக் கபபலில் ஏறறிககொண்டு சென்றுன , கபபல இடை யில உடைந்து பலா மாண்டனா , சிலா தப்பிப பிழைததுக காவிரிப்பூம் பட்டினஞ் சோந்து, அரசனை யடைந்து, மகனைக் கம்பளச செட்டி கெடுதத விததததை யறிவிததார்கள , வள வன, மகனை யிழந்த துயரம் பொறுளுய அவனைத தேடிப பல விடங்களிலும் அலைந்து திரிந்தான் , அதனுல், நகரததாரும் இந்திர விழாவை மறந்தனர் , மணிமேகலா தெய்வத்தின் சாபததால காவிரிப்பூம் பட்டினம அழிந்தது , மாதவியும, சுதமதியும், அறவணவடிகளும் வஞசி நகரததை யடைந் தாாகள. அரசனும் வேறு தேசஞ் சென்றுன்,' எனக கூறி மறைந்தாள்.

அவள் சென்றபின, புண்ணிய ராசன், அபபுன்னை மர நிழலிலுள்ள மணலைத் தோண்டித தன் பழைய உடம் பின் எலும்பைக் கண்டு மயங்கினன; பின்பு மணிமேகலை யால் தேறுதலடைந்து, அவள் உரைதத அருமொழிகளைக்

கேட்டுத் தன்னாடு சென்றான். மணிமேகலையும் புத்த பீடத்தை வணங்கி எழுந்து, ஆகாய வழியே வஞ்சி நகரத் திற்குப் புறப்பட்டாள்.

---

## 27. வஞ்சிமா நகரம் புக்க காதை

ஆகாய வழியாக மேற்றிசை நோக்கிச் சென்ற மணிமேகலை, வஞ்சி நகரத்தின் புறத்தே சென்று, இறங்கித் தனது அன்னையாகிய கண்ணகி தேவியையும் தந்தையாகிய கோவலனையுந் தரிசிக்க விரும்பிக் கண்ணகியின் கோயிலையடைந்து, அன்புடன் வணங்கி, 'தாயே, நீ உன் கணவனாகிய கோவலன் இறந்ததை யறிந்து அவனுடன் இறக்காமலும், கைம்மை நோன்பு கொள்ளாமலும், அடங்காச் சீற்றங் கொண்டு, மதுரைமா நகரத்தை எரித்து அழித்ததற்குக் காரணம் யாது?' என வேண்டினள்.

மகள் மொழி கேட்ட பத்தினித் தெய்வமாகிய கண்ணகி, மணிமேகலையை நோக்கி, 'எனது கணவற்குற்ற கடுந் துயர் பொறுக்காமல் நான் மதுரா நகரத்தை அழிக்கத் தொடங்கியபோது, மதுராபதி என்னுந் தெய்வம் எனக்கு முன்வந்து, 'நீங்கள் முற்பிறப்பிற் செய்த தீவினைப் பயனால் இத்துன்பத்தை அனுபவித்தீர்கள் அதனை உரைப்பேன்; கேள்: முன்னாளிற் கலிங்க தேசத்துச் சிங்கபுரத் தரசனாகிய வசு வென்பவனும், கபிலபுரத் தரசனாகிய குமரன் என்பவனும், தம்முட் பகை கொண்டு பெரும்போர் புரிந்தனர். அக்காலத்திற் சிங்கபுரத்துக் கடைவீதியில் சங்கமன் என்னும் வணிகன் தன் மனைவியோடு பண்டம் விற்றுக்கொண்டிருந் தான். அவனிடத்திற் பொறாமை கொண்ட பரதன் என்னும் பெயருடைய அரசனுடைய ஏவலாளன், வசுவென்பவனி டஞ் சென்று, சங்கமன் பகையரசனுடைய தூதுவனென்

றறிவித்து, அவனைக் கொலை செய்வித்தான் அச்சங்க மன் மனைவியாகிய நீலி என்பவள், தன் காதலன் அநியாய மாயக் கொல்லப்பட்டதற்கு வருந்தி, 'எனக்கு இத்துன்பஞ் செய்தார், மறுமையில் இத்துன்பத்தை யடைவாராக!' எனச் சபித்து, ஒரு மலையின் உச்சியிலேறி விழுந்து உயிர் துறந்தாள். அப்பரதனே இன்று கோவலனாகப் பிறந்தான். அவ் வினைப் பயனால் நீங்கள் இத்துன்ப மடைந்தீர்கள்,' எனக் கூறியது. அம்மொழிகளைக் கேட்டும் என் கோபம் அடங் காமையால், மீண்டும் அந்நகரத்தை எரித்து அழித்தேன். இது நிற்க.

'நானும் என் நாயகனும் முன் செய்த நல்வினைப் பயனால் தெய்வ உருவம் பெற்றோம், இந்நல்வினைப் பயனை அனுபவித்து முடிந்த பின் அத்தீவினைப் பயனையும் அனுப விப்போம். இவ்வாறே பல பிறப்புக்களில் இன்ப துன் பங்களை அனுபவித்து, உத்தர கோசல தேசத்துக் கபில வாஸ்துவில் புத்த தேவர் அவதரித்து, உலகம் முழுவ தும் தருமோபதேசஞ் செய்து விளங்குங் காலத்தில், யாமும் அவருடைய உபதேசம் பெற்று, நிர்வாண மடைவோம். நானும் உன் தந்தையும் காவிரிப்பூம் பட் டினத்துப் புத்த சைத்தியத்தில் உள்ள இந்திர விஹாரம் ஏழினையுங் கண்டதனால் எங்கட்கு அப்பேறு கிடைத்தல் துணிபு. அக்காலம் வரையில் யாங்கள் பல வகைப்பட்ட சித் திகளைச் செய்துகொண்டிருப்போம். நீ இனி வஞ்சி நகரத்தி னுள்ளே சென்று, அங்குள்ள பல சமய வாதிகளுடைய கொள்கைகள் எல்லாவற்றையும் அறிந்து, அவற்றுளொன் றும் உனக்கு உண்மையாகத் தோன்றாமையால், பின்பு பௌத் தசமயத்தைக் கைக்கொண் டொழுகுவாய்' என்றுரைத்தாள்.

மணிமேகலை கண்ணகியை வணங்கி, வேற்றுரு எய்து விக்கும் மந்திர வலிமையால் தன்னுருவை மாற்றி, ஒரு முனி

வர் வேடம் பூண்டு, வஞ்சியம பதியிற் சென்று, அங்குள்ள பல சமய வாதிகளுடைய கொள்கைகளையும் கேட்டு அறிந்து கொண்டாள்.

---

## 28. கச்சிமா நகர் புக்க காதை

பின்பு மணிமேகலை, அறவணவடிகளையும் மாதவியையும் சுதமதியையுங் காண விரும்பிப் புற நகரைக் கடந்து, உள்ளே சென்று, அந்நகரத்தின் பல வகைப்பட்ட வளப்பை யெல்லாங் கண்டு மகிழ்ந்து, பௌத்த முனிவர்கள் தங்கியிருக்குந் தவச சாலையை யடைந்தாள்.

அங்கே தவஞ் செய்துகொண்டிருந்த கோவலன் தந்தையாகிய மாசாத்துவானைக் கண்டு வணங்கித் தன் கையிலுள்ள பாத்திர மகிமையும், ஆபுத்திரன் வரலாறும், அவனுடன் தான் மணிபல்லவஞ் சென்றதும், தீவ திலகையாற் காவிரிப்பூம் பட்டினங் கடல் கொண்டதென் றறிந்ததும், மாதவி முதலியோர் இந்நகரடைந்தமையின் அவர்களைக் காண விரும்பியதும், கண்ணகியின் கோயிலடைந்து வணங்கியதும், சமய வாதிகளின் கொள்கைகள் தன் மனத்திற்குப் பொருந்தாமையும் ஆகிய எல்லாவற்றையும் மணிமேகலை உரைத்தாள்; மாசாத்துவான் இம்மொழிகளைக்கேட்டு, 'நான் உன்னைக் காணப்பெற்றது முன் செய்த நல்வினைப் பயனே!' என்றுரைத்து, 'உன் தந்தையாகிய கோவலனும், தாயாகிய கண்ணகியும் அடைந்த துன்பங்களையும், மதுரைமா நகரம் எரிந்து அழிந்ததையும் கேள்விப்பட்டு, எல்லாப் பொருள்களையுந் துறந்து, பௌத்த மதத்தை மேற்கொண்டு, தவஞ் செய்வே னாயினேன். முற்காலத்தில் இவ்வஞ்சி நகரத்தை இமய வரம்பன் நெடுஞ்சேரலாதன் என்னும் சேர அரசன் ஆண்டு வந்தான். அப்பொழுது இலங்கைத் தீவிலுள்ள சம

ஞேளி யென்னும் மலையை யடைந்து தரிசனஞ் செய்து ஆகாய மார்க்கமாக வந்த சில சாரணர்கள் இவ்விடத்தில் இறங்கினர்கள். அரசன் அவர்களைக் கண்டு வணங்கி உபசரித்தான், அப்பொழுது அவர்கள் புத்த தேவ ரருளிய பல அற மொழிகளை உபதேசஞ் செய்தார்கள், உன் தந்தைக்கு ஒன்பது தலைமுறை முன்னேனாகிய கோவலன் என்பான் அவ்வரசனுக்கு உற்ற நண்பனாகலால், இவ்விடமிருந்தான் சாரணர் உரைத்த அறமொழிகளைக் கேட்டுத் துறவறம் பூண்டு ஏழு தினத்தில் தன் பொருளை யெல்லாந் தரும வழியிற் செலவிட்டுத் தவஞ் செய்வானாயினன். அக் கோவலன் இவ்விடத்திற் கட்டுவித்த புத்த சைத்தியத்தைக் காணும் பொருட்டே யான் இவ்விடம் வந்தேன், இங்குள்ள முனிவர்கள், 'காவிரிப்பூம் பட்டினம் கடலால் அழியும்,' எனக் கூறியதால், அந்நகருக்குச் செல்லாமல், இவ்விடமே தங்கிவிட்டேன், உன் தந்தை கோவலனும் புத்த தேவர் அவதரிக்குங் காலத்து, அவரிடத்து உபதேசம் பெற்று, நிர்வாணமடைவான் என முனிவர்கள் கூறக் கேட்டேன்.. நீயும் உன் பிறகாலச் செய்திகளைக் கந்திற் பாவையால் அறிந்தா யென்று அறவணவடிகள் எனக்கு உரைத்தார் அவரும் உனக்குத் தருமோபதேசஞ் செய்தற்குரிய இடம் காஞ்சி நகரமே எனத் துணிந்து, அவ்விடஞ் சென்றார். மாதவியும் சுதமதியும் அவரோடு சென்றனர். காஞ்சி நகரத்திற் சில ஆண்டுகளாக மழை பெய்யாது பெரும் பஞ்சந் தோன்றியதால், எல்லா வுயிர்களும் பசிப்பிணியால் வருந்துகின்றன! அங்கிருந்த முனிவர்களும் உணவு கிடைக்காமல் இவ்விடம் வந்துவிட்டார்கள். ஆதலால், அந்நகரடைந்து, வெயிலால் வாடிய பயிர்கட்கு மழை போல், உயிர்களின் பசித்துயர் போக்கிக் காப்பது உன் கடனாகும்' என்று உரைத்தான்.

அது கேட்ட மணிமேகலை உடனே அவனை வணங்கி, அமுத சுரபியைக் கையிற் கொண்டு, ஆகாய மார்க்கமாக வடதிசை நோக்கிச் சென்று, வறுமையாற் செழுமை குன்றிய காஞ்சி நகரைக் கண்டு மனமிரங்கி, அந்நகரை வலமாக வந்து, அந்நகரின் நடுவே இளங்கிள்ளியால் கட்டுவிக்கப்பட்ட புத்தாலயத்தை வணங்கி, அதற்குத் தென் மேற்குத் திசையி லுள்ள ஒரு பூஞ்சோலையில் தங்கினாள்.

அதனை யறிந்த ஒருவன் விரைவாக அரசனிடஞ் சென்று, 'மன்னர் பிரானே, இந்நாவலந் தீவிலுள்ள அனை வரினுஞ் சிறந்தவளும், தவ வொழுக்கம் பூண்டவளும், கோவலன் மகளுமாகிய மணிமேகலை, அமுத சுரபி என்னும் பாத்திரத்தைக் கையிலேந்தி, இந்நகரத்தை யடைந்து, தருமத வனத்தில் தங்கி யிருக்கின்றாள்,' என உரைத்தான். அதைக் கேட்ட இளங்கிள்ளி முன்பு தனக்குரைத்த கந்திற்பாவை யின் மொழி இன்று பலித்ததென்று மகிழ்ந்து, அத்தெய்வத் தை வணங்கி, மந்திரி முதலானவர்களுடன் புறப்பட்டு, மணி மேகலை இருக்கும் இடத்தை யடைந்து, அவளை நோக்கி,

> 'செங்கோல் கோடியோ செய்தவம் பிழைத்தோ
> கொங்கவிழ் குழலார் கற்புக் குறைபட்டோ
> நலத்தகை நல்லாய் நன்னா டெல்லாம்
> அலத்தற் காலை யாகிய தறியேன்
> மயங்குவேன் முன்னரோர் மாதெய்வந் தோன்றி,
> 'உயங்கா தொழிநின் உயாதவத் தாலோர்
> காரிகை தோன்று மவள்பெருங் கடிஞையின்
> ஆருயிர் மருந்தால் அகனில முய்யும்.'

அவளுடைய அருளால் இந்திரன் ஏவ மழை பெய்யும். அவள் இந்நகரத்தை அடைந்த பின்னர் இங்குப் பல தரு மங்களும் நிகழும். மழை பெய்யா தொழியினும், நீர் வளங்

குறையாது. 'மணிபல்லவமுங் கோமுகிப் பொய்கையும் இங்கு வந்தனவோ!' எனக் கண்டோர் ஐயுறுமாறு, ஒரு சோலையும் பொய்கையும் அமைப்பாயாக,' என்று சொல்லிப் போயிற்று அத்தெய்வம் உரைத்தபடி செய்து வைத்த இடம் இதுவாகும்,' என்று அவ்விடத்தைக் காட்ட மணிமேகலை அங்கு ஒரு புத்த பீடமும், மணிமேகலா தெய்வம் தீவதிலகை ஆகிய இவர்கட்குக் கோயிலும் கட்டுவித்து அரசனைக் கொண்டு அக்கோயில்களுக்கு நித்திய பூசையுந் திருவிழாவும் நடப்பித்தாள். பின்பு தன் கையிலுள்ள அமுதசுரபியைப் புத்த பீடத்தின்மேல் வைத்து 'உண்ணுதற்குரியார் யாவரும் வருக,' என்றழைத்தாள்.

அப்பொழுது குருடரும், செவிடரும், முடவர்களும், ஊமைகளும், நோயாளிகளும், ஆதரவில்லாதவர்களும், தவஞ் செய்வாரும், பிறரும் வந்து, உணவருந்தி இளைப்பாறினர்கள், விலங்கினங்களும் உண்டு பசி தணிந்தன. அப்பாத்திரம் மேலும் மேலும் உணவு பெருக்கிக்கொண்டே எல்லாருடைய பசியையுந் தணித்தது. இந்நிகழ்ச்சிகளை யறிந்து அறவணவடிகளும், மாதவியும், சுதமதியும் அவ்விட மடைந்தனர்.

அறவணவடிகளைக் கண்ட மணிமேகலை விரைந்து சென்று, அவருடைய திருவடிகளை வணங்கி, அவரை ஆசனத்தில் எழுந்தருளுவித்து, அறுசுவைப் போனக மருத்தி உபசரித்தாள். பின்பு, 'யான் செய்த தருமம் தவறுமற் பலிக்குமாறு அருள் புரிக' என வேண்டி, அவரடியை மீண்டும் வணங்கினாள்.

---

## 29. தருமங் கேட்ட காதை

அறவணவடிகள் மணிமேகலையை வாழ்த்தி, 'நாக நாட்டரசன் மகளாகிய பீலி வளை தான் பெற்ற மகனை அவன் தந்தையாகிய கிள்ளி வளவனிடஞ் சேர்க்குமாறு, மணிபல்லவத்திலிருந்து சென்ற கம்பளச் செட்டியிடம் ஒப்புவிக்க, அக்கப்பல் கடலில் உடைந்தமையால், அம்மைந்தன் தவறியதைச் சிலர் கூறக் கேட்ட அரசன் வருத்தத்தினால் மகனைத் தேடிப் பல விடங்களிலும் அலைந்து திரிந்தான். அதனால், நகரத்தார் இந்திர விழாவை மறந்தனர். அதனால், காவிரிப்பூம் பட்டினம் இந்திர சாபத்தால் நீரில் முழுகியது. நான் மாதவி சுதமதிகளுடன் புறப்பட்டு இவ்விட மடைந்தேன்,' என்றார்.

மணிமேகலை, 'நானும் இதனைத் தீவ திலகையால் அறிந்தேன். பின் வஞ்சி நகரடைந்து, பல சமய உண்மைகளையுங் கேட்டேன். அவை என் மனத்திற்குப் பொருந்தாமையால், நான் கொண்ட முனிவர் வடிவத்தையும் அந்நகரத்தையுந் துறந்து, இந்நகரடைந்து உம்மைச் சரணம் புக்கேன். தேவரீர் எனக்கு உண்மைப் பொருளை உணர்த்தியருள வேண்டும்,' என இரந்து நின்றாள். அறவணவடிகள் காட்சி, அநுமானம் என்னும் அளவைகளின் இலக்கணங்களை அவளுக்கு விளங்க உபதேசித்தார்.

## 30. பவத்திறம் அறுகெனப் பாவை நோற்ற காதை

அவ்வுபதேசங்களைப் பெற்ற மணிமேகலை, 'புத்த தேவனையும், புத்த தருமத்தையும், புத்த சங்கத்தையும் சரணமாக அடைகின்றேன்,' என்று மூன்று தரம் சொல்லி, அறவணவடிகளை மும்முறை வலம் வந்து வணங்கிச் சரணமென்றடைந்தாள். அப்பொழுது அறவணவடிகள் பேதைமை முதலிய பன்னிரு நிதானங்களின் தோற்ற ஒடுக்கங்களை அவளுக்கு விரிவாக எடுத்துரைத்து, 'பண்டைக் காலத்தில் அவதரித்த புத்த தேவர்கள் அருளிய மெய்ப்பொருள்களும் இவையே,' எனப் புகன்று, 'உன் மன இருளகன்று ஞானச் சுடர் விளங்குக,' என வாழ்த்தினார். மணிமேகலை அவ்வுபதேசங்களால் மெய்யுணர்ச்சி யடைந்து, 'பிறவித் துன்பம் ஒழிவதாக,' என்று அந்நகரிலே தவஞ் செய்துகொண்டிருந்தாள்.

சுபம்! சுபம்!!

Printed at the B. N. Press, Mount Road, Madras.